


ஸ்ரீ

வீரவரமுநயேநம

ஸர்வம்விஷ்ணுமயஞ்ஜகத்

# ஸ்ரீமத்கம்பராமாயணம்

தெய்வப்புலமைக்

## கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்தது.

ஐந்தாவது

# சுந்தரகாண்டம்.



இயற்றமிழாசிரியர்

**அ-வீராசாமிசெட்டியாரவர்கள்**

மாணாக்கரும் நார்மல்கல்லீஜில்தமிழ்ப்புலவரும்

ஆகிய

கோமளபுரம்

**இராசகோபாலபிள்ளையவர்களால்**

பலபிரதிகளைக்கொண்டாராய்ந்து

கையெழுத்தாலுள்ளவாகியவழுக்களைக்களைந்து



புங்கத்தூர்

**ம-சபாபதிமுதலியாரது**

கல்விவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



இஃது

வையாவூர்

**அருணாசலமுதலியாரால்**

நிறைவேறியது

சித்தார்த்திஸ்ரீ - சித்திரைமீ 1859



ஹரிஓம்.







நன்றாக குருவாழ்க குருவேதுணை.



## கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீமத்கம்பராமாயணம்.



# ரு-வது சுந்தரகாண்டம்.



## முதலாவது - கடறாவுபடலம்.

தனியன்.

மெச்சிட்டார்பொதுநோக்கிற்சீர்தூக்கிக்கம்பனெனுமேதக்கோன்றன், உச்சிட்டமுலகிலுள்ளகசடறக்கற்றுயர்புலவருளுற்றியாப்பில், வைச்சிட்டசொற்பொருளுக்கணிமுதலவென்பர்தனிமிதிலைக்காந்தை, விச்சிட்டமணவாளன்புகழெனின்மற்றிதன்றகைமை விளம்பற்பாற்றே.

காப்பு.

அலங்கலிற்றோன்றும்பொய்ம்மையரவெனப்பூதமைந்தும்
விலங்கியவிகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதெவரைக்கண்டாலவரென்பர்கைவில்லேந்தி
இலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்கிறுதியாவார். (க)

நூல்.

ஆண்டகையாண்டவ்வானோர்துறக்கநாடருகர்கண்டான்
நீண்டதுதான்கொல்வேலையிலங்கையென்றையமெய்தா
வேண்டருவிண்ணாடென்னுமெய்ம்மைகண்டுள்ளமீட்டான்
காண்டகுசோலையும்பரில்லெனக்கருத்துட்கொண்டான். (உ)

கண்டனனிலங்கைமூதூர்க்கடிபொழிற்கனகநாஞ்சில்
மண்டலமதிலுங்கொற்றவாயிலுமணியிற்செய்த
வெண்டளக்கனகமாடவீதியும்பிறவுமெல்லாம்
அண்டமுந்திசைகளெட்டுநடுங்கத்தோள்கொட்டியார்த்தான். (௩)

வன்றந்தவரிகொளுகம்வயங்கனலுமிழும்வாய
பொன்றந்தமுழைகடோறும்புறத்துராய்ப்புரண்டுபோவ
நின்றந்தமிலையூன்றநெரிந்துகீழழுந்திநீலக்
குன்றந்தன்வயிறுகீறிப்பிதுங்கினகுடர்கண்மான. (௪)

புகலருமுழைபுக்கின்றும்பொங்குளைச்சீயம்பொன்றி
உகலருங்குருதிகக்கியுள்ளுறநெரிந்தவுழியின்
அகலிரும்பரவைநாணவரற்றுறுகுரலவாகிப்
பகலொளிகரப்பவானைமறைத்தனபறவையெல்லாம். (௫)

மொய்யுறுசெவிகடாவிமுதுகுறமுறைகாறள்ள
மையுறுவிசும்பினூடுநிமிர்ந்தவாலதியமஞ்சின்
மெய்யுறத்தழீஇயமெல்லென்பிடியொடும்வெருவலோடும்
கையுறமரங்கள்சுற்றிப்பிளிறினகளிநல்யானை. (௬)

பொன்பிறழ்சிமயக்கோடுபொடியுறப்பொறியுஞ்சிந்த
மின்பிறழ்குடுமிக்குன்றம்வெரிநுறவிரியும்வேலை
பன்புறமயிரும்பூவாக்கட்புலப்புறத்துதாறு
வன்பறழ்வாயிற்கவ்விவல்லியமிரிந்தமாதோ. (௭)

தேக்குறுசிகரக்குன்றந்திரிந்துமெய்ந்நெரிந்துசிந்தத்
தூக்குறுதோலர்வாளர்துரிதத்தினெழுந்ததோற்றம்
தாக்குறுசெருவினேரார்தாளறவீசத்தாவி
மேக்குறவிசைத்தாமொன்னப்பொலிந்தனர்விஞ்சைவேந்தர். (௮)

தாரகைசுடர்கண்மேகமென்றிவைதவிரத்தாழ்ந்து
பாரிடையழுந்துகின்றபட்டர்நெடும்பனிமாக்குன்றம்
கூருகிர்க்குவவுத்தோளான்கூம்பெனக்குமிழ்பொ[illegible]
ஆர்கலியழுவத்தாழுங்கலமெனலாயிற்றன்றே. (௯)

சாதுறுநறுமென்சந்தங்குங்குமங்குலிகந்தண்ணென்
போதுறுபொலன்றாதென்றித் தொடக்கத்தயாவும்பூசி
மீதுறுசுனைநீராடியருவியொடலையின்வீழ்வ
ஓதியகுன்றங்கீண்டு குருதிநீர்சொரிந்தாலொத்த. (௰)

கூடலுறுமத்திதென்னக்கருவரைதிரியுங்காலை
மீடலுறுபுலன்கள்வென்றமெய்த்தவர்விசும்பினுற்றார்
நீடலுறுகிரியிற்றாந்தஞ்செய்வினைமுற்றிமுற்றா
நாடலுறுபாசம்வீசாதும்பர்செலவாருமாதவர். (௰௧)

வெயிலியற்குன்றங்கீண்டுவெடித்தலுநடுக்கமெய்ப்பூ
மயிலியற்றேவிமார்கடழீஇக்கொளப்பொலிந்தவானோர்
அயிலெயிற்றரக்கனள்ளத்திரிந்தநாளணங்குபுல்லக்
கயிலையினிருந்ததேவைத்தனித்தனியடுத்தல்செய்தார். (௰௨)

ஊறியநறவுமுற்றநற்றமுமுணர்வையுண்ணச்
தேறியமனத்தர்தெய்வமடந்தையரூடறீர்வுற்
றாறினரஞ்சுகின்றாரனைத்தழுவியும்பர்
ஏறினரிட்டநீத்தபைங்கிளிக்கிரங்குகின்றார். (௰௩)

இத்திறநிகழும்வேலையிமையவர்முனிவர்மற்றை
முத்திறத்துலகத்தாருமுறைமுறைவிரைவின்மொய்த்தார்
கொத்துறுமலருஞ்சாந்துஞ்சுண்ணமுமணியுந்தூவி
வித்தகசென்றியென்றார்வீரனும்விரைவதானான். (௰௪)

குறுமுனிகுடித்தவேலைகுப்புறுங்கொள்கைத்தாதல்
வெறுவிதுவிசயம்வைகும்விலங்கற்றோளலங்கல்வீர
சிறுவிதென்றிகழற்பாலையல்லைநீசேறியென்று
உறுவலித்துணைவர்சொன்னா ரொருப்பட்டான பொருப்பையொப்
[பான். (௰௫)

இலங்கையினளவிற்றன்றாலிவ்வுருவெடுத்ததோற்றம்
விலங்கவுமுளதன்றென்றுவிண்ணவர்வியந்துநோக்க
அலங்குறுழ்மார்பன்முன்றாழ்ந்தடித்துணையழுத்தமேலோடும்
பொலன்கெழுமலையுந்தாளும்பூதலம்புக்கமாதோ. (௰௬)

வால்விசைத்தெடுத்துவன்றாண்மடக்கிமார்பொடுக்கிமானத்
தோள்விசைத்துணைகள்பொங்கக்கழுத்தினைச்சுருக்கித்தூண்டும்
கால்விசைத்தடக்கைநீட்டிக்கட்புலங்கதுவாவண்ணம்
மேல்விசைத்தெழுந்தானுச்சிவிரிஞ்சனாடுரிஞ்சவீரன். (௰௭)



# கடறாவுபடலம்.

ஆயவ்வெழுகலோடுமரும்பணைமரங்கடாமும்
வேயுயாகுன்றும்வென்றிவேழமும்பிறவுமெல்லாம்
நாயகன்பணியிதென்றுதெளிர்கடலிலங்கைசாரும்
பாய்வனவென்னவானம்படர்ந்தனவெழுவமான. (௰௮)

இசையுடையண்ணல்சென்றவேகத்தாலெழுந்தகுன்றும்
பசையுடைமரனுமாவும்பல்லுயிர்க்குலமும்வல்லே
திசையுறச்சென்றுசென்றுசெறிகடலிலங்கைசேரும்
விசையிலவாகத்தள்ளிவீழ்ந்தனவென்னவீழ்ந்த (௰௯)

மாவொடுமரனுங்கல்லும்வல்லியுமியாவுமற்றும்
போவதுபுரிந்தவீரன்விசையினாற்புணரிபொங்கத்
தூவினகீழுமேலுந்தூர்த்தனசுருதியன்ன
சேவகன்சீருமுன்னஞ்சேதுவுந்தெரிந்தமாதோ. (௨௰)

கீண்டதுவேலைநன்னீர்கீழுறக்கிடந்தநாகர்
வேண்டியவுலகமெங்கும்வெளிப்பட்டமணிகண்மின்ன
ஆண்டவையுணைநோக்கியரவினுக்கரசர்வாழ்வும்
காண்டகுதவத்தனும்மேனியாமெனக்கருத்துட்கொண்டான். (௨௧)

வெய்தின்வான்சிறையினீர்வேலையைக்கிழியவீசி
நொய்தினமுதங்கொண்டநோன்மையேநுவலுநாகர்
உய்த்துநாமென்பதென்னையுறுவலிக்கலுழனூழின்
எய்தினானென்றஞ்சிமறுக்கமுற்றிரியல்போனார். (௨௨)

துள்ளியமகரமீன்கடுடிப்பறச்சுறவுதூங்க
ஒள்ளியபணமீச்சுறுஞ்சுந்திவலையுழிக்காலின்
வள்ளுகிராவீரன்செல்லும்விசைபொருமறுகிவாரி
தெள்ளியதிரைகண்முந்துற்றிலங்கைமேற்றவழ்ந்தமாதோ. (௨௩)

இடிக்குறுபொருள்களென்றுதெண்டிசைசுமந்தயானை
நடுக்குறவிசையிற்செல்லுநாயகன்றூதனேகம்
எடுக்குறுகாலவன்காற்றிடியொடுமொடியவந்நாள்
முடிக்குறக்கடலிற்செல்லுமுத்தலைக்கிரியுமொத்தான். (௨௪)

கொட்புறுபுரவித்தெய்வக்கூர்நுதிக்குலிசத்தாற்கும்
கட்புலங்கதுவலாகர்வேகத்தாற்கட்டுமண்ணும்
உட்படத்தங்கூட்டியண்டமுறவுளசெலவினொற்றைப்
புட்பகவிமானந்தானவ்விலங்கைமேற்போவதொத்த. (௨௫)

விண்ணவரேத்தவேதமுனிவரர்வியந்துவாழ்த்த
மண்ணவரிறைஞ்சச்செலலுமாருதிமறமுட்கூர
அண்ணல்வாளரக்கன்றன்னையமுக்குவாமின்னமென்றுங்
கண்ணுதலொழியச்செலலுங்கைலையங்கிரியுமொத்தான். (உசு)

மாணியாய்வேடந்தாங்கிமலரயற்கறிவுமாண்டோர்
ஆணியாயுலகுக்கெல்லாமறம்பொருணிரப்புமண்ணல்
சேணுயர்நெடுநாமேர்ந்ததிரிதலைச்சிறுவன்றன்னைக்
காணியவிளாவிற்செல்லுங்கனகமால்வரையுமொத்தான். (உஎ)

மழைகிழித்துதிரமீன்கண்மறிகடல்பாயவானம்
குழைவுறத்திசைகள்கீறமேருவுங்குலுங்கக்கோட்டின்
மூழையுடைக்கிரிகண்முற்றமுடிக்குவான்முடிவுக்காலத்
தழிவுறக்கடுக்கும்வேகத்தாதையுமனையனானான். (உஅ)

தடக்கைநாலைந்துபத்துத்தலைகளுமுடையான்றானே
அடக்கியைம்புலன்கள்வென்றதவப்பயனறுதலோடும்
கெடக்குறியாகமாகங்கிழக்கெழுவழக்குநீங்கி
வடக்கெழுந்திலங்கைசெல்லும்பரிதிவானவனுமொத்தான். (உகூ)

புறத்துறலஞ்சிவேறோரரணம்புக்குறைதல்போக்கி
மறத்தொழிலரக்கர்வாழுமாநகர்மனுவின்வந்த
திறத்தலையிராமனென்னுஞ்செவகற்பற்றிச்செல்லும்
அறத்தகையரசன்றிண்போராழியுமனையனானான். (௩௰)

கேழலாமுழுநிலாவிற்கிளரொளியிருளைக்கீறப்
பாழிமாமேருநாணவிசும்புறப்படர்ந்ததோளான்
ஆழிசூழுலகமெல்லாமருங்கனன்முருங்கவுண்ணும்
ஊழிநாள்வடபாற்றோன்றுமுழுவாமுழுமதியுமொத்தான். (௩௧)

அடலெலாந்திகிரிமாயற்கமைந்தனனாற்றல்காட்டக்
குடலெலாமவுணர்சிந்தக்குன்றெனக்குறித்துநின்ற
திடலெலாந்தொடர்ந்துசெல்லச்சேண்விசும்பொதுங்கத்தெய்வக்
கடலெலாங்கலங்கத்தாவுங்கலுழனுமனையனானான். (௩உ)

நாவினேறுலகமூன்றுநடுக்குறவடுக்கிநாகர்
மேவின்மேனின்றகாருஞ்சென்றகூலத்தின்விண்டு
காலினாலந்தவான்மூகட்டுடையுங்கடக்கக்கால
வரிலளந்தானென்னவான்வரம்நீளச்சென்றான். (௩௩)

விளித்துப்பின்வேலைநாவும்வீரன்வால்வேதமெய்க்கும்
அளித்துப்பினனுமனென்னுமறந்துணைபெற்றதாயும்
களித்துப்புன்றொழின்மேனின்றவரக்கர்கண்ணுறுவராமென்
றொளித்துப்பின்செல்லுங்காலபாசத்தையொத்ததன்றே. (௫௪)

மேருவைமுழுதுஞ்சூழ்ந்துமீதுற்றவேகநாகம்
கார்நிறத்தண்ணலேவக்கலுழன்வந்துற்றகாலை
சோர்வுறுமனத்ததாகிச்சுற்றியசுற்றுநீங்கிப்
பேர்வுறுகின்றவாறுமொத்ததப்பிறங்குபேர்வால். (௫௫)

குன்றொடுகுணிக்குங்கொற்றக்குவவுத்தோட்குரக்குச்சீயம்
சென்றுறுவேகத்திண்காலெறிதரத்தேவர்வைகும்
மின்றொடர்வானத்தானவிமானங்கள்விசையிற்றம்மின்
ஒன்றொடொன்றுடையத்தாக்கிமாக்கடலுற்றமாதோ (௫௬)

வலங்கையின்வயிரவேதிவைத்தவன்வைகுநாடும்
கலங்குவதேகுவான்றன்கருத்தென்கொலென்னுங்கற்பான்
விலங்கயிலெயிற்றுவீரன்முடுக்கியவேகம்வெய்யோர்
இலங்கையினளவன்றென்னுமிம்பர்நாடிரிந்ததிப்பால். (௫௭)

ஓசனையுலப்பிலாதவுடம்பமைந்துடையவென்னத்
தேசமுநாலுஞ்சொல்லுந்திமிங்கிலகிலங்களோடும்
ஆசையையுற்றவேலைகலங்கவன்றண்ணலயாக்கை
வீசியகாலின்வீழ்ந்துமிதந்தனமீன்களெல்லாம். (௫௮)

பொருவருமுருவத்தன்றான்போகின்றபொழுதுவேகம்
தருவனதடகைதள்ளாதுமிர்ச்சியதம்முளொப்ப
ஒருவருங்குணத்துவள்ளலோருயிர்த்தம்பியோடும்
இருவருமுன்னர்ச்சென்றாலொத்தவவ்விரண்டுபாலும். (௫௯)

வேறு.

இந்நாகமன்றெனெறிகாலெனவேகும்வேலை
திந்நாகமாவிற்செறிகீட்டிசைக்காவல்செய்யும்
கைந்நாகமந்நாள்கடல்வந்ததொர்காட்சிதோன்ற
மைந்நாகமென்னுமலைவானுறவந்ததன்றே. (௬௰)

மீயோங்குசெம்பொன்முடியாயிரமின்னிமைப்ப
ஓயாவருவித்திரளுத்தரியத்தையொத்த
தீயோருளராகியதாலவர்தீமைதீர்ப்பான்
மாயோன்மகரக்கடலின்றெழுமாண்பதாகி. (௬௧)

நூலேந்துகேள்விநுகராப்புலனோக்கலுற்றார்
போலேந்துநின்றதனியாண்மெய்பொருதுநீங்கக்
காலாழ்ந்தழுந்திக்கடல்புக்குழீஇக்கச்சமாகி
மாலேந்தமேவாங்குநெடுமந்தரமேயுமான, (சஉ)

தள்ளாற்கருநற்சிறைமாழ்தலைப்பொடோங்க
எள்ளாற்கருநன்னிறமெல்லையிலாதபுல்ல
வள்ளாற்படலைகெடநீக்கிமருந்துவவ்வி
உள்ளூற்றெழுமோருவணத்தரசேயுமொத்த. (சங)

ஆன்றுநெடுநீரிடையாழியொடந்தமாகித்
தோன்றுதுநின்றானருடோன்றிடமுற்றுதோன்று
மூன்றுமுலகத்திடைமுற்றுயிராயமற்றும்
ஈன்றுணயீன்றசுவணத்தனியண்டமென்ன, (சச)

இந்நீரினென்னைத்தருமெந்தையையெய்தியன்றிச்
செந்நீர்மைசெய்யேனெனச்சிந்தனைசெய்துநொய்தின்
அந்நீரிலவர்துமுதலந்தணனாதிநாளம்
முந்நீரின்மூழ்கித்தவமுற்றிமுளைத்தவாபோல், (சடு)

பூவாலிடையூறுபுகுந்தபொழுதநெஞ்சின்
ஓவாமுனிசீறிடவாரிகுளித்தவெல்லாம்
மூவாமுதலையகன்மீளமுயன்றவந்நாள்
தேவாசுரர்வேலையில்வந்தெழுதிங்களென்ன, (சசு)

நிறங்குங்குமமொப்பனநீணிறம்வாய்த்தநீரின்
இறங்கும்பவளக்கொடிசுற்றினசெம்பொனேய்ந்த
பிறங்குஞ்சிகரப்படாமுன்றிறொறும்பிணுவோ
டிறங்கும்மகரங்களுயிர்ப்பொடுணர்ந்துலாவ, (சஎ)

கூடன்கூன்முதிரிப்பிகுலாக்கநிரைத்தபாசி
வான்சூழ்மழையொப்பவயங்குபளிங்குமுன்றி
ருன்சூலநாளிற்றலைகமுத்தமுயிர்த்தசங்கம்
மீன்சூழ்வருமம்முழுவெண்மதிவீறுகீற, (சஅ)

பல்லாயிரமாயிரங்காசினம்பாடிமைக்கும்
கல்லார்சிமயத்தடங்கைத்தலநீண்டுகாட்டத்
தொல்லார்கலியுட்புகமூழ்கிவயங்குதோற்றத்
தெல்லாமணியீட்டமுகந்தெழுகின்றதென்ன, (சகூ)

மனையிற்பொலிநாகநெடுங்கொடிமாலையேய்ப்ப
வினையிற்றிரள்வெள்ளருவித்திரளேங்கிவீழ
நினையிற்கடலூடெழுமேலொடுமுணர்ந்துநீங்காச்
சுனையிற்பனைமீன்றிமிலோடுதொடர்ந்துதுள்ள, (௫௰)

கொடுநாலொடிரண்டுகுலப்பகைகுற்றமூன்றும்
சுடுஞானம்வெளிப்படவுய்த்ததுயக்கிலார்போல
விடநாகமுழைத்தலைவிம்மலுழன்றுநீங்க
நெடுநாள்பொறைபுற்றவுயிர்ப்புநிமிர்ந்துநிற்ப, (௫௧)

எழுந்தோங்கிவிண்ணுறுமண்ணுறக்கவிலங்குமாடு
உழந்தோடுகாலத்திடையும்பரினிம்பரொங்கும்
கொழுந்தோடிநின்றகொழுங்குன்றைவியந்துநோக்கி
அழுங்காமனத்தண்ணலிதென்கொலென்றுவயிர்த்தான், (௫௨)

நீர்மேற்படராநெடுங்குன்றுநிமிர்ந்துநிற்றல்
சீர்மேற்படராதெனச்சிந்தையுணர்ந்துசெல்வான்
வேர்மேற்படவன்றலைகீழ்ப்படநூக்கிவிண்ணோர்
ஊர்மேற்படரக்கடிதும்பரின்மீதுயர்ந்தான், (௫௩)

உந்தாமுனுலைந்துயர்வேலையொளித்தகுன்றும்
சிந்தாகுலமுற்றதுபின்னருந்தீர்விலன்பால
வந்தோங்கியாண்டோர்சிறுமாணிடவேடமாகி
எந்தாயிதுகேளெனவின்னவிசைத்ததன்றே, (௫௪)

வேற்றுப்புலத்தோனெனலையவிலங்கலெல்லாம்
மாற்றுச்சிறையென்றரிவச்சிரமாணவோச்ச
வீற்றுப்படநூறியவேலையின்வேலையுய்த்துக்
காற்றுக்கிறைவனெனைக்காத்தனனன்புகாக்க, (௫௫)

அன்னானருங்காதலனாதலினன்புதூண்ட
என்னாலுனக்கிண்டுசெயற்கரிதாயதின்மை
பொன்னார்சிகரத்திடையாறினைபோதியேனும்
உன்னாலுயர்ந்தேனுயாவிற்குமுயர்ந்ததோளாய்; (௫௬)

கார்மேகவண்ணன்பணிபூண்டருங்காலின்மைந்தன்
தேர்வான்வருகின்றதுசீதையைத்தேவருய்யப்
பேர்வானயல்சேறியிதிற்பெறும்பேறிலென்ன
நீர்வேலையுமென்னையுரைத்ததுநீதிநின்றாய், (௫௭)

நற்றாயினுநல்லனெனக்கினியனென்றுநாடி
இற்றைப்பிறையெய்தினையேய்ந்ததுகோடியென்றால்
பொற்றாரகன்மார்பதம்மில்லுழைவந்தபோதே
சுற்றார்செயன்மற்றுமுண்டோவெனவுற்றுரைத்தான் (ருஅ)

உரைத்தானுரையாவிவனன்றிலனென்பதுன்னி
விரைத்தாமரைவாண்முகப்பிட்டிவிளங்குவீரன்
சிரித்தானவாம்வசிரித்துத்திசைசெல்லநோக்கி
வளைத்தாணெடும்பொற்குடுமித்தலைமாடுகண்டான் (ருகூ)

வருந்தேனதுவென்றுணைவானவன்வைத்தகாதல்
அருந்தேனினியாதுமெனுசைநிரப்பினல்லால்
பெருந்தேன்பொழிசாரனின்னன்புபிணித்தபோதே
இருந்தேனுகர்ந்தேனிதினூஉங்கினியீவதுண்டே (சுய)

முன்பிற்பிறந்தாரிடையுள்ளவர்காதன்முற்றப்
பின்பிற்பிறந்தார்குணநன்றிதுபெற்றயாக்கைக்
கென்பிற்பிறந்தாயதொரூற்றமுண்டென்னலாமே
அன்பிற்பிறந்தாயதொர் பூசனையார்கணுண்டே, (சுக)

நீண்டியாய்கடிதேகியிலங்கைவிலக்கலெய்தி
ஆண்டானடிமைத்தொழி லாற்றலினேற்றலுண்டேல்
மீண்டியானுயர்வென்னல்விருந்தெனவேண்டுமெய்ம்மை
பூண்டானவல்கட்புலம்பிற்படமுந்துபோனான், (சுஉ)

செவ்வாய்கதிருங்குளிர்திங்களுந்தேவர்வைகும்
வெவ்வேறுவிமானமுமீனெடும்மேகமற்றும்
எவ்வாயுலகத்தவுமீண்டியிருந்ததம்மின்
ஒவ்வாதனவொத்திடவாழிவெங்காலுமொத்தான் (சுங)

நீர்மாக்கடன்மேனிமிர்கின்றநிமிர்ச்சிநோக்காப்
பார்மேற்றவழ்சேவடிபாய்நடவாப்பகத்தே
தேர்மேற்குறிகொண்டவனித்திறஞ்சிந்தைசெய்தான்
ஆர்மேற்கொலென்றெண்ணிபருக்கனுமையமுற்றான் (சுச)

வாளொத்தொளிர்வாலெயிறாழின்மருங்கிமைப்ப
நீளொத்துயர்வாலின்விசும்புநிரம்புமெய்யன்
கோளொத்தவல்மேனிவிசும்பிருகூறுசெய்தி
நாளொத்ததுமேலொளிகீழிருளுற்றஞாலம் (சுரு)

மூன்றாற்றதலத்திடைமுற்றியதுன்பம்வீப்பான்
என்றாற்றுவந்தான்வலிமெய்ம்மைபுணர்த்துநீயென்
றூன்றுற்றவானோர்குறைநேரவரக்கியாகித்
தோன்றுற்றுநின்றாள்சுரசைப்பெயர்ச்சிந்தைதூயாள் (சுசு)

பேழ்வாயொரரக்கியுருக்கொடுபெட்பினோங்கிக்
கோழ்வாயரியின்குலத்தாய்கொடுங்கூற்றுமுட்க
வாழ்வாயெனக்காமிடமாய்வருவாய்கொலென்று
நீழ்வாய்விசும்பின்றனதுச்சிநெருங்கிநின்றாள் (சுஎ)

நீயேயெனலாயபசிப்பிணிதீர்த்தல்செய்வாய்
ஆயேவினைவுற்றனையண்மினோ வண்மையாள
நீயேயினிவந்தெனிணங்கொள்பிணங்கெயிற்றின்
வாயேபுகுவாய்வழிமற்றிலைவானினென்றாள் (சுஅ)

பெண்பாலொருநீபசிப்பீழையொறுக்கநொந்தாய்
உண்பாயெனதாக்கையையானுதவற்குநேர்வல்
விண்பாலவர்நாயகனேவலிழைத்துமீண்டால்
நண்பாலெனச்சொல்லியநல்லறிவாளனக்கான் (சுகூ)

காய்ந்தேழுலகங்களுங்காணநின்யாக்கைதன்னை
ஆய்ந்தேபசிதீர்வெனின்றுணையென்றனள்சொன்னாள்
ஓர்ந்தானுமிகழ்ந்தொருமேவினதாழில்பேழ்வாய்
சேர்ந்தேகுகின்றேன்வலையாமெனிற்றின்னியென்றான் (எய)

அக்காலையரக்கியுமண்டமனந்தமாகப்
புக்காளிறையாதபுழைப்பெருவாய்திறந்து
மிக்காதுவிழுங்கநின்றாளதுநோக்கிவீரன்
திக்காரவள்வாய்சிறிதாம்வகைசேணினீண்டான் (எக)

நீண்டானுடனேசுருங்காநிமிர்வாள்வயிற்றின்
ஊண்டானெனவுற்றொருயிர்ப்புயிராதமுன்னர்
மீண்டானதுகண்டனர்விண்ணுறைவோர்களெம்மை
ஆண்டான்வலனென்றலர்தூஉய்நெடிதாசிசொன்னார் (எஉ)

மின்மேற்படர்நோன்மையனுடல்வீங்கிநீங்கத்
தன்மேனியளாயவடாயினுமன்புதாழ
என்மேன்முடியாதனவென்றினிதேத்திநின்றாள்
பொன்மேனியனுநெடிதாசிபுனைந்துபோனான் (எங)

கீதங்களிசைத்தனர்கின்னரர்கீதநின்ற
பேதங்களியம்பினர்பேதையராடல்பின்னர்ப்
பூதங்கடொடர்ந்துபுகழ்ந்தனபூசுரேசர்
வேதங்களியம்பினர்தென்றல்விருந்துசெய்த. (எச)

மந்தாரமுந்துமகரந்தமணந்தவாடை
செந்தாமரைவாண்முகத்திற்செறிவேர்சிதைப்பத்
தந்தாமுலகத்திடைவிஞ்சையர்பாணிதள்ளும்
கந்தாரவீணைக்களிசெஞ்செவிக்காதுநுங்க. (எரு)

வேறு.

வெங்கார்நிறப்புணரிவேறுறையுமொன்றைப்
பொங்கார்கலிப்புணறரப்பொலிவதேபோல்
இங்கார்கடத்திரெனவென்றுவெழுந்தாள்
அங்காரதாரைபெரிதாலாலமன்னாள். (எசு)

காதக்கடுங்குறிகணக்கிறுதிகண்ணாள்
பாதச்சிலம்பிரெலிவேலையொலிபம்ப
வேதக்கொழுஞ்சுடரைநாடிநெறிமேனாள்
ஓதத்தின்மேவுமதுகைடவனையொத்தாள். (எஎ)

துண்டப்பிறைத்துணையெனச்சுடரெயிற்றாள்
கண்டத்திடைக்கறையுடைக்கடவுள்கைப்மா
முண்டத்துரித்தவுரிபாண்முளரிவந்தான்
அண்டத்தினுக்குறையமைத்தபிலவாயாள். (எஅ)

நின்றாணிமிர்ந்தலைநெடுங்கடலினீர்தன்
வன்றாளலம்பமுடிவான்முகடுவவ்வ
அன்றாய்நிறத்தவனறத்தையருமேனொடும்
தின்றாளொருத்தியிவளென்பதுதெரிந்தான். (எகூ)

பேழ்வாயகத்தலதுபேருலகமூடும்
நீழ்வானகத்தினிடையேகுநெறிநேரா
வாழ்வானனுக்கணவளாழ்பிலவயிற்றைப்
போழ்வானினைத்தினையவாய்மொழிபுகன்றான். (அ௰)

சாயாவரந்தழுவிளைய்த்தழியபின்னும்
ஓயாதுவந்தவிசைகண்டுணரகில்லாய்
வாயாலளந்துநெடுவான்வழியுடைத்தாய்
நீயாரையென்னையிவணின்றநிலையென்றான். (அக)

பெண்பாலெனக்கருதுபெற்றியொழியுற்றால்
விண்பாலவர்க்குமுயிர்வீறுதல்மெய்யே
கண்பாலடித்தவுயிர்காலன்வரும்மனும்
உண்பானருத்தியதொழிப்பரியதென்றாள் (௮௨)

திறந்தாளெயிற்றையவளண்ணலிடைசென்றான்
அறந்தானரற்றியதயர்த்தமரரெய்த்தார்
இறந்தானெனக்கொடொரிமைப்டதனின்முன்னம்
பிறநதானெனப்பெரியவோளரிபெயர்ந்தான் (௮௩)

கள்வாயரக்கியதறக்குடர்கணத்தில்
கொள்வார்கடக்கையின்விசும்பைமிசைகொண்டான்
முள்வாழ்பொருப்பின்முழையெய்திமிகநொய்தின்
உள்வாளரக்கொடெழுநிண்கலுழன்றுத்தான் (௮௪)

சாதாவரத்தலைவரிற்றிலதமன்றான்
ஏதாவரக்கிகுடர்தொண்டிடனெழுந்தான்
மாதாலசைப்பவடமண்ணினுறவாலோ
டாதாயமுற்றதகலிக்குவமைபாறன் (௮௫)

ஆர்த்தனர்கள்வானவர்கடானவரமுங்கா
வேர்த்தனர்விரிஞ்சனும்வியந்துமலர்வெள்ளம்
தூர்த்தனனகன்கலையிற்றெருலைவிமலனும்
பார்த்தனன்முனித்தலைவராசிகள்பகர்ந்தார் (௮௬)

மாண்டாளரக்கியவள்வாய்வயிறுதாறும்
கீண்டானிலமைப்பினிடைமேநகிரிகீழா
நீண்டான்வயக்கதிநினைப்பினெடிதென்றாப்
பூண்டானருக்கனுயர்வானின்வழிபோறன் (௮௭)

சொற்றார்கள்சொற்றதொகையல்லதுணையொன்றே
முற்றுமுடந்கநெறிவானினிடைமுந்நீர்
இற்றாவிபெற்றெனினும்யானினியிலங்கை
உற்றால்விலங்குமிடையூறெனவுணர்ந்தான் (௮௮)

ஊறுகடிதூறுவனவூறிலறமுன்றாத்
தேறியரக்கர்புரிதீமையவைதீர
வேறுதகையாண்டைய வீராமனெனவெல்லாம்
மாறுமதிர்மாறுபிறிதில்லெனவலித்தான் (௮௯)

வேறு.

நிசும்புடைக்கனைநாஞ்சிற்றடிமறிந்துநோக்கான்
அசும்புடைப்பிரசத்தெய்வக்கற்பகநாட்டையண்மி
விசும்பிடைச்செல்லும்வீரன்விலங்கிவேறிலங்கைமூதூர்ப்
பசுஞ்சுடர்ச்சோலைத்தாங்கோர்பவளமால்வரையிற்பாய்ந்தான் (கூ௰)

மேக்குறச்செல்வோன்பாயவிலங்கிநீரிலங்கைவெற்பு
நூக்குறுத்தங்கேமிங்குந்தன்னுறநடங்குநோன்மை
போக்கினுக்கிடையூறப்புயலொடுபொதிர்தவாடை
தாக்குறத்தளர்ந்துசிந்துங்கலமெனத்தக்கதன்றே (கூ௧)

மண்ணடியுற்றுமீதுவானுறவரம்பின்றன்மை
எண்ணடியுற்றகுன்றத்தலத்துநின்றெய்தநோக்கி
விண்ணிடையுலகமென்னுமெல்லிபன்மேனிநோக்கக்
கண்ணடிவைத்ததன்னவிலங்கையைத்தெரியக்கண்டான் (கூ௨)

நன்னகரதனைநோக்கிநளினக்கைமறித்துநாகர்
பொன்னகரிதனையொக்குமெம்பதுபுல்லிதம்மா
அந்நகரிதனினன்றேயண்டத்தைமுழுதுமாள்வான்
இந்நகரிருந்துவாழ்வானிதுவதற்கேதுவென்றான் (கூ௩)

மாண்டதோர்நலத்திற்றென்றுணர்ந்துதல்வாட்டமைத்தன்றால்
வேண்டியவேண்டினெய்திவெறுப்பின்றிவிழைந்ததுய்க்கும்
ஈண்டரும்போகவின்பமீறிலதியாண்டுக்கண்டாம்
ஆண்டதுதுறக்கமெஞ்சேயருமறைத்துணிவுமம்மா (கூ௪)

உட்புலனெழுநூறென்பர்யோசனைபுலமூன்றில்
மிகப்புறுபொருள்களெல்லாமிதனுழைச்செறிந்தவென்றால்
நுட்புலனுணங்குகேள்விநுண்மைவிலனொனினுநோக்கும்
கட்புலன்வரம்பிற்றன்றோமாட்சியுங்காயிற்றம்மே (கூ௫)

கடறாவுபடலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம்-கூ௫,
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௨-வது - ஊர்தேடு படலம்.

வேறு.

பொன்கொண்டிழைத்துமணியைக்கொடுபொதிந்த
மின்கொண்டமைத்தவெயிலைக்கொடுசமைத்த
என்கொண்டியற்றியவெனத்தெரிகிலாத
வன்கொண்டல்விட்டுமதிமுட்டுவனமாடம். (௧)

நாகாலயங்களொடுநாகருலகுந்தம்
பாகாமருங்குதுயிலவென்னவுயர்பண்ப
ஆகாயமஞ்சவகன்மேருவையணுக்கும்
மாகால்வழங்குசிறுதென்றல்வரநின்ற. (௨)

மாகாரின்மின்கொடிமடக்கினரடுக்கி
மீகாரமெங்கணுநறுந்துகள்விளக்கி
ஆகாயகங்கையிணையங்கையினினள்ளிப்
பாகாயசெஞ்சொலவர்வீசுபடுகாரம். (௩)

வேறு.

பஞ்சியூட்டியபாட்டிசைககிண்கிணிப்பதுமச்
செஞ்செவிச்செழும்பவளகதின்கொழுஞ்சுடர்சிதறி
மஞ்சினஞ்சனநிறமறைத்தரக்கியர்வடித்த
அஞ்சிலோதியரோடுவமையவவர்க்குறுமுவமை. (௪)

நானநாண்மலர்க்கற்பகநறுவினாநாறப்
பானம்வாயுறவெறுத்தசாளாறுடைப்பறவை
தேனவாவிவாச்செழுங்கழுநீர்த்துயிலசெய்ய
வானயாறுகம்பரமிபதலந்தொறுமடுத்த. (௫)

குழலும்வீணையும் யாழுமென்றிணையனகுழைய
மழலைமென்மொழிகிளிக்கிருந்தளிக்கின்றமடநளிர்
சுழலுநன்னெடுந்தடமணிச்சுவர்தொறுந்துவன்றும்
நிழலுந்தம்மையுமெய்ம்மைநின்றறிவருநிலைய. (௬)

இனையமாடங்களிந்திரற்கமைவரவெடுத்த
மனையின்மாட்சியவென்னினச்சொல்லுமாசண்ணும்
அனையதாமெனினரக்கர்தந்திருவுக்குமளவை
நினையலாமன்றியுவமையுமன்னதாநிற்கும். (௭)

மணிகளொத்துணைபெரியவுமாதிருமார்பின்
அணியுங்காசினுக்ககன்றனவுளவெனலரிதால்
திணியுநன்னகர்த்திருமனைதெய்வமாத்தச்சன்
துணிவின்வந்தனன்முட்டமுகிழைததவத்தொழில்கள்- (௮)

வாழுமன்னுயிர்யாவையுமொருவழிவாழ
ஊழிநாயகன்றிருவயிறொத்துளதிவ்வூர்
ஆழியண்டத்தினருக்கன்றனலங்குதேர்ப்புரவி
ஏழுமல்லனவீண்டுளகுதிரையுமெல்லாம். (௯)

மரகடங்களுங்கற்பகமனையெலாங்கனகம்
அரமடந்தையர்சிலதியராக்கியர்க்கமரர்
உரமடங்கிவந்துழையராயுழல்பவரொருவர்
தரமடங்குவதன்றிதுதவஞ்செய்ததவமால். (௰)

போரினைந்தனதோற்றவென்றிகழ்தலிற்புறம்போய்
நேரியன்றவன் றிசைதொறுநின்றமாநிற்க
ஆரியந்தனி யைங்கரக்களிறுமோராழிச்
சூரியன்றனித்தேருமேயிந்நகர்தொகாத. (௰௧)

தேவரொன்பவர்யாருமித்திருநகர்க்கிறைவற்
கேவல்செய்கிலாரேவரோவெண்வகையுருவின்
மூவர்தம்மினு மநிகனென்றாலவன்முயலும்
நாவின்மாதவமல்லதுபிறிதொன்றுநகருமோ. (௰௨)

குழங்குபேரியினர்கலித்தகைநெடுங்களிறு
முழங்குமோதையுமூரிநீர்முழக்கொடுமுழங்கும்
கொழுங்குழற்புதுக்குதலையர்நூபுரக்குரலின்
வழங்குமப்பெருந்துழனியவ்வயின்வெறுமறையும் (௰௩)

மரகதத்தினுமற்றுளமணியினும்வனைந்த
நரகதத்தடந்தேரினமவைபயில்கொட்டில்
இரவிவெள்கநின்றிமைக்கின்றவியற்கைய வென்றால்
நரகமொக்குமானன்னெடுந்துறக்கமிந்நகர்க்கு (௰௪)

திருகுறுஞ்சினத்தரக்கருங்கருநிறந்தீர்ந்தா
ருருகுபோகின்றதிங்களுமறுவற்றதழகைப்
பருகுமிந்நகர்த்துன்னொளிபாய்தலிற்பசும்பொன்
உருகுகின்றதுபோன்றுளதுலகுசூழ்வரி. (௰௫)

அண்டமுற்றவும்வீங்கிருளகற்றுநின்றலரி
கண்டவாற்றினிக்கடிநகர்நெடுமனைக்கதிர்கள்
உண்டவாற்றினென்றுனைப்பரிதொப்பிடிற்றன்முன்
விண்டவாய்ச்சிறுமின்மினியென்னவும்விளங்கா. (௰௬)

தேனுஞ்சாந்தமுமான்மதஞ்செறிநறுஞ்சேறும்
வானநாண்மலர்க்கற்பகமலர்களும்வயமாத்
தானவாரியுநீரொடுமடுத்தலிற்றழீஇய
மீனுந்தானுமோர்வெறிமணங்கமழுமாம்வேலை. (௰௭)

தெய்வத்தச்சனைப்புகழ்துமோசெங்கண்வாளரக்கன்
மெய்ம்மையாற்றியதவத்தையேவியத்துமோவிரிஞ்சன்
ஐயப்பாடிலாவரத்தையேமதித்துமோவறியாத்
தொய்யற்சிந்தையாம் யாவரையாதென்றுதுதிப்பாம். (௧அ)

வேறு.

வானுந்நிலனும்பெறுமாறினிமற்றுமுண்டோ
கானும்பொழிலும்மிவைசெங்கனகத்தினாலும்
ஏனைம்மணியாலுமியற்றியவேனும்யாவும்
தேனும்மலருங்கனியந்தரச்செய்தசெய்கை. (௧௯)

வேறு.

நீரும்வையமுநெருப்புமேனியிர்நெடுங்காலும்
வாரிவானமும்வழங்கலவாகுந்தன்வளர்ச்சி
ஊரினிந்நெடுங்கோபுரத் துயர்ச்சிகண்டுணர்ந்தால்
மேருவெங்ஙனம்விளர்க்குமோமுழுமுற்றும்வெள்கி. (௨௰)

முன்னம்பாவருமிராவணன்முனியுமென்றெண்ணிப்
பொய்னின்மாநகர்மீச்செலாக்கதிரோனைப்புலவோர்
கன்னிபாயிற்றெளியினிற்கண்டாற்குறுதல்
உன்னிநாடொறும்விலங்கினல் போதலையுணரார். (௨௧)

தீபசெப்குநர்தேவராலனையவர்சேரும்
வாயிலல்லதோர்வரம்பமைக்குவமெனமதியாக்
காயமென்னுமக்கணக்கறுபதத்தைநீங்கிக்
ஐயுநன்மதிவிட்டனன்கைலையையெடுத்தான். (௨௨)

கறங்குகால்புகாக்கதிரவனொளிபுகாமறலி
மறம்புகாஇனிவானவர்புகாரென்கைவம்பே
திறம்புகாலத்துள்யாவையுஞ்சிதையினுஞ்சிதையா
அறம்புகாதிந்தவணிமதிட்கிடக்கைநின்றகத்தின்

கொண்டவான்றிரைக்குரைகடலிடையதாகச்சுடுமி
கண்டவாவிசும்பெட்டநின்றிமைக்கின்றவெழிலால்
பண்டைநாகணைப்பள்ளியானுந்தியிற்பயந்த
அண்டமேபுரைவதொத்திருந்ததவ்வானகரமதி (௨௪)

பாடுவார்பலரொன்னிர் மற்றவரினும்பலரால்
ஆடுவார்கண்மற்றவரினும்பலருளரனமதி
கூடுவாரிடையின்னியங்கொட்டுவார்முட்டில்
வீடுகாண்குறுந்தேவரால்விழுநடங்காண்பார் (௨௫)

வானமாதரோடிசைநுவர்விஞ்சையர்மகளிர்
ஆனமாதரோடாடுவரியக்கியரவரைச்
சேனைவார்குழலரக்கியர்தொடர்குவர்தொடர்ந்தால்
ஏனைநாடியரருநடக்கிரியையாய்ந்திருப்பார் (௨௬)

இழையுமாலையுமாடையுஞ்சாந்தமுமேந்தி
உழையரென்னநின்றுதவுவநிதியங்களொருவர்
விழையும்போகமேபிங்கிதுவாய்கொண்டுவிளம்பின்
குழையுநெஞ்சினனிணையினுமாடுசென்றுகொள்ளும் (௨௭)

பொன்னின்மால்வரைமேன்மணிபொழிந்தன்னபொருத்தி
உன்னுநான்முகத்தொருவனின் றூழ்முறையுமைக்குப்
பன்னிநாள்பலபணியுழன்றரிதினிற்படைத்தான்
சொன்னவானவர்தச்சனு மிந்நகர்துதிப்பான் (௨௮)

மகரவீணையின்மந்திரகீதத்தின்மறைந்த
சகரவேலையினர்கலிதிசைமுகன்றடவும்
சிகரமாளிகைத்தலந்தொறுந்தெரிவையர்நிவந்த
அகருதூபத்தினமுந்தினமுகிற்குலமனைத்தும் (௨௯)

பளிக்குமாளிகைத்தலந்தொறுமிடந்தொறும்பசுந்தேன்
துளிகருங்கற்பகத்தண்ணறுஞ்சோலைகடோறும்
அளிக்குந்தேறலுண்டாடுநர்பாடுநராகிக்
களிக்கின்றாரலாற்கவல்கின்றாரொருவரைக்காணேன் (௩௰)

தேறன்மாந்தினர்தேனிசைமாந்தினர்செவ்வாய்
ஊறன்மாந்தினரின்னுணாமாந்தினரூடல்
கூறன்மாந்தினரனையவர்த் தொழுதெழுகோபத்
...ன்மாந்தினரரக்கியர்க்குயிரன்னவரக்கர் (௩௧)

...நகுங்குமத்திளமுலையெழுதியதொழில்கள்
...த்தமேனியிற்பொலிந்தனரூடலிற்கனன்று
...றித்துநோக்கியர்மலரடிமஞ்சுளப்பஞ்சி
குறித்தகோலங்கள்பொலிந்தனவரக்கர்தங்குஞ்சி (௩௨)

விளரிச்சொல்லியர்வாயினன்வேலையுண்மிடைந்த
பவளக்காடெனப்பொலிந்தது படைநெடுங்கண்ணாற்
குவளைக்கோட்டகங்கடுத்ததுகுளிர்முகக்குழுவான்
மூளரிக்கானமுமானதுமுழங்குநீரிலங்கை (௩௩)

வேறு.

எழுந்தனர்திரிந்துவைகு மிடத்ததாயின்றுகாறும்
கிழிந்திலதண்டமென்னு மிதனையேகிளப்பதல்லால்
அழிந்திதின்றுவதென்னே யலருளோனுதியாக
ஒழிந்தபேருயிர்களெல்லாமரக்கருக்குறையும்போதா (கச)

காயத்தாற்பெரியர்வீரங் கணக்கிலருலகங்கல்லும்
ஆயத்தார்வரத்தின்றன்மையளவற்றாரதிகமேற்றாம்
மாயத்தார்நகர்க்கெங்கேனும்வரம்புமுண்டாமேமற்றோர்
தேயத்தார்தேயஞ்சேறல்தெருவிலோர்தெருவின்சேறல். (கரு)

கழலிலாக்காலுங்காலவயிலிலாக்கையுங்காந்தும்
அழலிலாக்கண்ணுமில்லாவாடவரில்லையன்னார்
குழலுலாங்களிவண்டார்க்குங்குஞ்சியாற்பஞ்சிகுன்று
மழலையாழ்க்குதலைச்செவ்வாய்மாதருமில்லைமாதோ. (கசா)

பள்ளுறக்கனிந்தபங்கியரக்கரைக்கடுத்தகாதல்
பள்ளுறத்தொடர்வமேனிபுலாலுறக்கடிதும்பாவ
வெள்ளுறுப்பெயிற்றசெய்யதலையனகரியமெய்ய
உள்ளுறக்களித்தகுன்றினுயர்ச்சியவோடையானை. (கள)

வள்ளிநுண்மருங்குல்அன்னவானவர்மகளிருள்ளம்
தள்ளுறப்பாணிதள்ளாநடம்புரிதடங்கண்மாதர்
வெள்ளிவெண்முறுவலேற்ற மடந்தையர்வெள்குகின்றார்
கள்ளிசையரகரமார்களியிடுகுரவைகாண்பார். (கஅ)

ஒறுத்தலோதிற்கமற்றெம்முயர்படைக்கொருங்கிவ்வூர்வத்
திறுத்தலுமெளிதாமற்றும் யாவர்க்குமியக்கமுண்டே
கறுத்தவாளரக்கிமாருமரக்கருங்கழித்துவீசி
வெறுத்தபூண்வெறுக்கையாலேதூருமிவ்வீதியெல்லாம்

வடங்களுங்குழைபும்பூணுமாலையுஞ்சாந்தும்யானைக்
கடங்களுங்கவினமாவிலாழியுங்கணக்கிலாத
இடங்களுமிடங்கடோறும் யாற்றொடுமெடுத்தவெல்லாம்
அடங்கியதென்னிலென்னே யாழியினுழ்ந்ததுண்டோ (சய)

விற்படைபெரிதென்கோயான்வேற்படைமிகுமென்கோயான்
மற்படையுளதென்கோயான்வாட்படைவலிதென்கோயான்
[illegible]ற்பணைந்தண்டுபிண்டிபாலமென்றினையகாத்தும்
நற்படையுடைத்தென்கோயான் நாயகற்குளாக்குநாளில். (சக)

என்றனனிலங்கைநோக்கியினையனபலவுமெண்ணி
நின்றவாளரக்கர்வந்துநேரினுநேர்வதொன்றாத்
தன்றனையுணபமேனி சுருக்கியச்சரளச்சாரற்
குன்றிடையிருந்தான்வெய்யோன்குணகடல்குளிப்பதானான் (சஉ)

வேறு.

ஐவினைபிறந்துழிச்செல்வமெய்தினான்
ஆய்வினைமனத்திலானறிஞர்சொற்கொளான்
வீயினைநினைக்கிலானொருவன்மெய்யிலான்
தீவினையெனவிருள்செறிந்ததெங்குமே (சங)

கரித்தழன்றெயிலுடைக்கணிச்சிவானவன்
எரித்தலைபந்தணரிழுத்தயானையை
உரித்தபேருரிவையாலுலகுக்கோருறை
புரித்தனனெனப்பொலியும்பொற்பதே (சச)

அணங்கரவரசர்கோனளவிலாண்டெலாம்
பணங்களின்றலைதொறுமுயிர்த்தபாய்விடம்
உணங்கலினுலகெலாமுறையினுண்டுவந்
திணங்கெரிபுகையொடுமெழுந்ததென்னவே (சரு)

வண்மைநீங்காநெடுமரபின்வந்தவன்
பெண்மைநீங்காதகற்புடையபேதையைத்
திண்மைநீங்காதவன்சிறைவைத்தானெனும்
வெண்மைநீங்கியபுகழ்விரிந்ததென்னவே. (சசா)

அவ்வழியவ்விருள்பரந்தவாயிடை
எவ்வழிமருங்கினுமரக்கரேகினார்
செவ்வழிமந்திரத்திசையாரயினும்
வெவ்வழியிருடரமிதித்துமீச்செல்வார் (சஎ)

இந்திரன்வளநகர்க்கேகுவாரிகற்
சந்திரனுலகினைச்சார்குவார்கலித்
தந்தகனுறைபுலையணுகுவாரியல்
வெந்ம ழிலரக்கனதேவன்மேயினார் (சஅ)

பொன்னகர்மடந்தையர்விஞ்சைப்பூவையர்
பன்னகவனிதையரியக்கர்பாவையர்
முன்னினபணிமுறைமாறமுந்துவார்
பின்னினமிடைந்தெனவிசும்பின் மீச்செல்வார் (சகூ)

தேவருமவுணருஞ்செங்கணுகரும்
மேவருமியக்கரும்விஞ்சைவேந்தரும்
யாவரும்விசும்பிருளிரியவீண்டினர்
தாவரும்பணிமுறைதழுவுந்தன்மையார். (௫௰)

சித்திரபத்தியிற்றேவர்சென்றனர்
இத்துணைதாழ்ந்தனமுனியுமென்றுதம்
முத்திரைங்களுமுடியின்மாலையும்
உத்தரீயங்களுமிரியவோடுவார் (௫௧)

நீண்டருந்தீவினைநீக்கத்தீந்துபோய்
மாண்டறவுலர்ந்ததுமாருதிப்பெயர்
ஆண்டடைமாரிவந்தளிக்கவாயிடை
ஈண்டறமுளைத்தெனமுளைத்ததிந்துவே (௫௨)

வந்தனனிராகவன்றாதன்வாழ்ந்தனன்
எந்தையேயிந்திரனுமென்றேமுறு
அந்தமில்கீட்டிசையளகவாணுதற்
சுந்தரிமுகமெனப்பொலிந்துதோன்றிற்றே (௫௩)

ஒற்றைவெண்கவரிபோற்கடலின்வெண்டிரை
சுற்றுநின்றலமரப்பொலிந்துதோன்றிற்றால்
இற்றதெம்பகையெனவெழுந்தவிந்திரன்
கொற்றவெண்குடையெனக்குளிர்வெண்டிங்களே (௫௪)

தெரிந்தொளிர்திங்கள்வெண்குடத்திறைத்திரை
முரிந்துயர்பாற்கடன்முகந்துமூரிவான்
சொரிந்துமேபாமெனத்துள்ளிமீநெடும்
விரிந்ததுவெண்ணிலாமேலுங்கீழுமே. (௫௫)

அருந்தவன்சுரபியேயாதிவானமா
விரிந்தபேருதயமேமடிவெண்டிங்கள்
வருந்தவின்முலைக்கதிர்வழங்குதாரையாச்
சொரிந்தபாலொத்ததுநிலவின்றோற்றமே. (௫௬)

என்னுடையநாமன்மேலிழிந்தபூமழை
மண்ணிடைவீழ்கிலமறித்தும்போகில
அண்ணல்வாளரக்கனையஞ்சியாய்கதிர்
விண்ணிடைத்தங்கினபோன்றமீனெலாம். (௫௭)

எல்லியினிமிரிருட்குறையுமவ்விருள்
கல்லியநிலவின்வெண்முறியுங்கள்வன
புல்லியபகையெனப்பொருவபோன்றன
மல்லிகைமலர்தொறும்பொதிந்தவண்டெலாம் (௫௮)

வீசுறுபசுங்கதிர்க்கற்றைவெண்ணிலா
ஆசறவெங்கணுநுழைந்தளாயது
காசறுகடிமதிலிலங்கைக்காவலூர்த்
தூசுறையிட்டதுபோன்றுதோன்றிற்றே (௫௯)

இகழ்வரும்பெருங்குணத்திராமனெய்ததோர்
பகழியின்செலவெனவநுமன்பற்றினால்
அகம்புகுந்தரண்புகுந்திலங்கையன்னவன்
புகழ்புகுந்துலாயதோர்பொலிவும்போன்றதே (௬௰)

அவ்வழிபநுமனுமணுகலாம்வகை
எவ்வழியென்பதையுணர்வினெண்ணினான்
செவ்வழியொதுக்கினன்றேவரோத்தப்போய்
வெவ்வழியரக்கரூர்மேவன்மேயினான் (௬௧)

வேறு.

ஆழியகழாகவரிதாயமரர்வாழும்
ஏழுலகின்மேலைவெளிகாறுமுகடேறிக்
கேழரியபொன்கொடுசமைத்தகிளர்வெள்ளத்
தூழிதிரிநாளுமழியாமதிலையுற்றான் (௬௨)

கலங்கலில்கடுங்கதிர்கண்மீதுகடிதேகா
அலங்கலயில்வஞ்சகனையஞ்சியெனினன்றால்
இலங்கைமதிலிங்கிதனையேறலரிதென்றே
விலங்கியகல்கின்றனவினாந்தெனவியந்தான் (௬௩)

தெவ்வளவிலாதவிறைசேறலுளதென்றால்
அவ்வளவதன்றரணமண்டமிடையாக
எவ்வளவிலுண்டுவெளியீறுமதுவென்றே
வெவ்வளவரக்கனைமனக்கொளவியந்தான். (௬௪)

மடங்கலரியேறுமதமால்களிறுநாண
நடந்துதனியேபுகுதுநம்பிநனிமூதூர்
அடங்கரியதானையயிலந்தகனதானைக்
கடுந்திறலின்வாயனையவாயிலெதிர்கண்டான் (௬௫)

மேருவைநிறுத்திவெளிசெய்ததுகொல்விண்ணோர்
ஊர்புகவமைத்தபடிகால்கொலுலகேழும்
சோர்விலநிலைக்கநடுவிட்டதொருதூணோ
நீர்புகுகடற்குவழியோவெனநினைந்தான் (௬௬)

ஏழுலகின்வாழுமுயிர்யாவையுமெதிர்ந்தால்
ஊழின்முறையன்றியுடனேபுகுதலுண்டே
வாழியரியங்குவழியீதெனவகுத்தால்
ஆழியுளவேழினளவன்றுபகையென்றான் (௬௭)

வெள்ளமொருநூறொடொருநூறுமுடைவீரக்
கள்ளவினைவெவ்வலியரக்கரிருகையும்
முள்ளெயிறும்வாளுமுறமுன்னமுறைநின்றார்
எள்ளரியகாவலினைபண்ணனுமெதிர்ந்தான் (௬௮)

சூலமழுவாளொடயில்தோமரமுலக்கை
காலவரிவிற்பகழிகற்பணமுகண்டு
கோல்கணையம்நமிகுலிசஞ்சுரிகைகுந்தம்
வாலமுதலாயுதம்வலித்தனர்வலத்தார் (௬௯)

அங்குசநெருங்கவுணயிற்சிலைவழங்கும்
வெங்குசையபாசமுதல்வெய்யபயில்கையார்
செங்குருதியன்னசெறிகுஞ்சியர்சினத்தோர்
பங்குனிமலர்ந்தொளிர்பலாசவனமொப்பார் (௭௰)

அளக்கவரிதாகியகணக்கொடயணிற்கும்
விளக்கினமிருட்டனைவிழுங்கிவெளிகால
உளக்கடியகாலன்மனமுட்குமணிவாயில்
இளக்கமில்கடற்படையிருக்கையையெதிர்ந்தான் [illegible]

எவ்வமரரெவ்வவுணரெவ்வருளரொன்னே
கவ்வைமுதுவாயிலினெடுங்கடைகடப்பார்
தெவ்வரிவர்சேமமிதுசேவகனும்யாமும்
வெவ்வமர்தொடங்கினினெனுவிளையுமென்றான்

கருங்கடல்கடப்பதரிதன்றுநகர்காவற்
பெருங்கடல்கடப்பதரிதெண்ணமிறைபேரின்
அருங்கடன்முடிப்பதரிதாமமர்கிடைக்கின்
நெருங்கமர்கிடைக்குநெடுநாளெனநினைந்தான் (௭௩)

வாயில்வழிசேறலரிதன்றியும்வல்லத்தோர்
ஆயிலவர்வைத்தவழியேசெலலழகன்றால்
காய்கதிரியக்கின்மதிலைக்கடிது தாவிப்
போயிநகர்புக்கிடுவெனென்றொரயல்போனான் (எச)

வேறு

நாணாளுந்தானல்கியகாவலணிமூதூர்
வாணாளந்நாள்போவதின்மேலேவழிநின்றாள்
தாணுமென்னுந்தோளுடையானைச்சுடரோனைக்
காணாவந்தகட்செவியென்னக்கனல்கண்ணாள் (எரு)

எட்டுத்தோளானான்முகத்தானுலகேழும்
தொட்டுப்பேருஞ்சோதிநிறத்தாள்சுழல்கண்ணாள்
முட்டிப்பேரின்மூவுலகத்தைமுதலோடும்
கட்டிச்சீறுங்காவல்வலத்தாள்கமையில்லாள் (எசா)

பாராநின்றெளெண்டிசைதோறும்பலரப்பால்
வாராநின்றாரோவெனமாரிமழையேபோல்
ஆராநின்றனூபுரமச்சந்தருதாளாள்
வேராமெய்யாண்மின்னினிடைக்குமிளிர்பூணாள்; (எஎ)

வேல்வாள்சூலம்வெங்கதைபாசம்விளிசங்கம்
கோல்வாள்குந்தங்கொண்டகரத்தாள்வடகுன்றம்
போல்வாடிங்கள்போழெயிற்றாள்புகைவாயிற்
காலவாள்காணிற்காலனுமுட்குங்கதமிக்காள் (எஅ)

அஞ்சுவணத்தினுடையுடுத்தாளரவெல்லாம்
அஞ்சுவணத்தின்வேகமிகுத்தாளருளில்லாள்
அஞ்சுவணத்தினுத்தரியத்தாளலையாரும்
அஞ்சுவணத்தின்முத்தொளிராரத்தணிகொண்டாள் (எகூ)

சிந்தாரத்தின்செச்சையணிந்தாள்தெளிநூல்யாழ்
அந்தாரத்தினேர்வருசொல்லாளறைதும்பி
கந்தாரத்தினின்னிசைபாடிக்களிகூரும்
மந்தாரத்தின்மாலையலம்புமகுடத்தாள் (அ0)

எல்லாமுட்குமாழியிலங்கையிகன்மூதூர்
நல்லாளவ்வூர்வைகுறையொக்குநயனத்தாள்
நில்லாய்நில்லாயென்றுரைநேர்வாணினையாமுன்
வல்லேசென்றாண்மாருதிகண்டாய்வருகென்றான் (அக)

ஆகாசெய்தாயஞ்சலைபோனுமறிவில்லாய்
சாகாமூலந்தின்றுழல்வார்பாற்சலமென்றும்
பாகாரிஞ்சிப்பொன்மதிறுவிப்பதையாதே
போகாயென்றாள்பொங்கனலென்னப்புகைகண்ணாள் அஉ

களியாவுள்ளத்தண்ணன்மனத்திற்கதமூழ்க
விளியாநின்றேநீதிநலத்தின்வினையோர்வான்
அளியாலிவ்வூர்காணுநலத்தினணைகின்றேன்
எளியேனுற்றால்யாவதுனக்கிங்கிழவென்றான் (அங)

என்றுமுன்னமேகெனவேகாதெதிர்மாற்றம்
சொன்னாயேநீயாவனடா:தொல்புரமட்டான்
அன்றோனுமஞ்சவொய்தற்களியுற்றால்
உன்றலெய்துமூர்கொலிவ்வூரொன்றுறநக்காள் (அச)

நக்காளைக்கண்டையன்மனத்தோர்நகைகொண்டான்
நக்காய்நீயார்யார்சொலவந்தாயுனதாவி
உக்காலேதானோடலையென்றாளினியிவ்வூர்
புக்காலன்றிப்போகிலெனென்றான்புகழ்கொண்டான் (அரு)

வஞ்சங்கொண்டான்வானரமல்லன்வருகாலன்
துஞ்சுங்கண்டாலென்னையிவன்சூழ்திரையாழி
நஞ்சங்கொண்டகண்ணுதலைப்போனகுகின்றான்
நெஞ்சங்கண்டேகல்லெனநின்றேநினைவுற்றாள் (அசு)

கொல்வாமன்றேற்கோளுறுமிவ்வூ ரெனல்கொண்டாள்
வெல்வாய்நீயேவென்றியெனத்தன்விழிதோறும்
வல்வாய்தோறும்வெங்கனல்பொங்கமதில்வாயில்
செல்வாயென்றூழிவிலைவேலைச்செலவிட்டாள் (அஎ)

தடித்தாமென்னத்தன்னெதிர்செல்லுந்தழல்வேலைக்
கடித்தானாகம்விண்ணின்முரிக்குங்கருளன்போல்
ஒடித்தான்கையாலும்பருவப்பவுயிர்காலம்
பிடித்தானெஞ்சத்துண்ணெனவெண்ணம்பிழையாதாள் அஅ

இற்றுச்சூலநீறெழுகாலத் தெரியொப்பாள்
மற்றுத்தெய்வப்பல்படைகொண்டுமலைவாண்மேல்
உற்றுக்கையாலாயுதமெல்லாமொழியாமல்
பற்றிக்கொள்ளாவிண்ணிலெறிந்தான்பழியோர்வான் (அகூ)

வழங்குந்தெய்வப்பல்படைகாணு மலைவால்மேல்
முழங்கும்மேகமென்னவுரப்பிமுதிர்கின்றாள்
கழங்கும்பந்துங்கொண்டுகொடாடுங்கரமோச்சித்
தழங்குஞ்செந்தீச்சிந்தவடித்தா டவில்லாள் (௩௰)

அடியாமுன்னமங்கையடனைத்து மொருகையால்
பிடியாவெவ்வினைபெண்ணிவள்கொல்லிற்பிழையென்று
ஒடியாநெஞ்சத்தோரடிகொண்டானுயிரோடும்
இடியேறுண்டநாகமெனப்பாரிடை வீழ்ந்தாள் (௩௧)

விழுந்தாளெழுந்தாள்வெங்குருதிச்செம்புனல்வெள்ளத்
தழுந்தாநின்றாளன்முனோர்தம்மருளன்றி
எழுந்தான்யாரும் யாவையுமெல்லாவுலகத்தும்
தொழுந்தாள்வீரன்றானவன்முன்னின்றிவைசொன்னாள் (௩௨)

வேறு.

ஐயகேள்வையநல்குமயனருளமைதியாக
எய்தியிம்மூதூர்காப்பெனிலங்கைமாதேவியென்பேர்
செய்தொழிலிழுக்கியுள்ளநீதிகைத்திருந்தச்சிறுமைசெய்தேன்
உய்தியென்றளிதியாயினுணர்த்துவதுண்மையென்றாள். (௩௩)

எத்தனைகாலங்காப்பல் யானிந்தமூதூரொன்று
முத்தனைவினவினேற்குமுரண்வலிக்குரங்கொன்றுன்னைக்
கைத்தலமதனாற்றீண்டக்காய்ந்தவன்றெல்லைக்காண்டி
சித்திரநகரம்பின்னைச்சிதைவதுதிண்ணமென்றான் (௩௪)

அன்னதேமுடிந்ததையவறம்வெல்லும்பாவந்தோற்கும்
என்னுமீதியம்பவேண்டுந்தகையதோவினிமற்றன்னால்
உன்னியவெல்லாமுற்றுமுனக்குமுற்றாததுண்டோ
பொன்னகர்புகுதியென்றுப்புகழ்ந்தவளிறைஞ்சிப்போனாள். (௩௫)

டவிரும்பிநோக்கிமெய்ம்மையேவினையுமஃதென்
ரியன்கமலபாதமகத்துறவணங்கியாண்டப்
பூரியரிலங்கைமூதூர்ப்பொன்மதில்தாவிப்புக்கான்
சீரியபாவின்வேலைசிறுநெறிதெறித்ததன்னான்; (௩௬)

வான்றொடர்மணியிற்செய்தமையறுமாடகோடி
ஆன்றபேரிருளைச்சீத்துப் பகல்செய்வதனைநோக்கி
ஊன்றியவுதயத்துச்சியொற்றைவானுருளைத்தேரோன்
தோன்றினன்கொல்லோவென்னவறிவுறுத்துணுக்கங்கொண்டான்.(

மொய்ம்மணிமாடமூதூர்முழுதிருளகற்றுந்தானே
மெய்ம்மையேயணிநுணுமிகையெனவிலங்கிப்போனான்
இம்மதிலிலங்கைநாட்டமெனைத்துமேற்றன்பாலெய்து
மின்மினியல்லனோவவ்வெயிற்கதிர்வேந்தனென்றான் (௯௮)

பொசிவுறுபசும்பொற்குன்றிற்பொன்மதினடுவட்பூத்து
வசையறவிளங்குஞ்சோதிமணியினைமைந்தமாடத்
நசைவிலவிலங்கைமூதூராரினின்மையாலே
நிசிசரராயிற்றம்மாநெடுநகர்நிருதரெல்லாம் (௯௯)

என்றனனிம்பிவீசியேகுசலிழக்கமென்னைத்
தின்றனையனையமேனிசுருக்கிமாளிகையின்சாரல்
சென்றனனென்பமன்னேதேவருக்கமுதமீந்த
குன்றெனவயோத்திவேந்தன்புகழெனக்குவவுத்தோளான் (௱)

ஆத்துறுசாலைதோறுமானையின்கூடந்தோறும்
மாத்துறுமாடந்தோறும்வாசியின்பந்திதோறும்
காத்துறுசோலைதோறுங்கருங்கடல்கடந்தகாலால்
பூத்தொறுமவாவிச்செல்லும்பொறிவரிவண்டிற்போனான் (௱௧)

பெரியநாளொளிகொளைவிதமணிப்பிச்சிப்பச்சி
சொரியுமாசிழல்களாங்காச்சுற்றலாற்காலில்தோன்றல்
கரியனாய்வெளியனாகிச்செய்யனாய்க்காட்டுங்காண்டற்
கரியனையெளியனைத்தன்னைத்துறையழகனேபோல் (௱௨)

கானகமயிலெனவன்னக்களிமடவன்னமென்ன
ஆனனகமலப்போதுபொலிதரவரக்கர்மாதர்
தேனுகுசரளச்சோலைதெய்வநீராற்றிற்றெண்ணீர்
வானவர்மகளிராட்டமஞ்சனமாடுவாரை (௱௩)

ஊட்டுவார்கவமலான்மற்றீட்டவொலியையவசின்மை
காட்டினர்விதியாரத்தூண்கிற்பார்காண்மினம்மா
பூட்டுவார்முலைபொறாதபொய்யிடைநையப்பூநீர்
ஆட்டுவாரமரர்மாதராடுவாரரக்கர்மாதர் (௱௪)

இலக்கணமரபிற்கேற்றவெழுவகைநரம்பினல்யாழ்
அலத்தகத்தளிர்க்கைநோவவளந்தெடுத்தமைந்தபாடல்
கலக்குறமுழங்கிற்றென்றுசேடியர்கன்னிமார்கள்
மலர்க்கையான்மாடத்தும்பர்மழையின்வாய்பொத்துவாரை (௱௫)

சந்தைப்பூம்பந்தர்வேய்ந்ததமணியவரங்கிற்றத்தம்
சிந்தித்ததுதவுந்தெய்வமணிவிளக்கொளிருஞ்சேக்கை
வந்தொத்துந்துரிதமாக்கள்விளம்பித்தநெறிவழாமை
கந்தர்ப்பமகளிராடுநாடகங்காண்கின்றாரை (௱௬)

திருத்தியபளிக்குவேதிதெள்ளியவேல்களென்னக்
கருத்தியல்புரைக்குமுண்கட்கருங்கயல்செம்மைகாட்ட
வருத்தியகொழுநர்தம்பால்வரம்பின்றிவளர்ந்தகாம
வருத்தியபயிர்க்குநீர்போலருநறவருந்துவாரை (௱௭)

கோதறுங்குவளைநாட்டங்கொழுநர்களூட்டங்கொள்ளத்
தூதுளங்கனியைவென்றதுவர்த்தவாய்வெண்மைதோன்ற
மாதருமைந்தர்தாமுமொருவர்மேலொருவர்வைத்த
காதலங்கள்ளுண்டார்போன்முறைமுறைகளிக்கின்றாரை (௱௮)

விற்படர்பவளப்பாதத்தலத்தகமெழுதிமேனி
பொற்பளவில்லாவாசப்புனைநறுங்கலவைபூசி
அற்புதவடிக்கண்வாளினஞ்சனமெழுதியந்தில்
கற்பகங்கொடுக்கவாங்கிக்கலன்றெரிந்தணிகின்றாரை (௱௯)

புலியமைதுகைமைந்தர்புதுப்பிழையுயிர்ப்புக்கு
நலிவிடவமுதவாயானச்சுயிர்த்தயிற்கணல்லார்
மெலிவுடைமருங்குன்மின்னினலமரச்சிலம்புவிம்மி
ஒலிபடவுதைக்குந்தோறுமயிர்புளகுதிக்கின்றாரை (௱௰)

உள்ளுடைமயக்காலுண்கண்சிவந்துவாய்வெண்மையூறித்
துள்ளிடைப்புருவங்கோட்டித்துடிப்பவேர்பொடிப்பத்தூய
வெள்ளிடைமருங்குலார்தம்மதிமுகம்வேறுன்றாகிக்
கடைத்தோன்றநோக்கிக்கணவனைக்கவல்கின்றாரை (௱௰௧)

ன்மலையின்சாரன்முனைமுயினிலமுதவாரிச்
பிற்றுவசரிவிற்சானகர்மனையிற்றூய
ற்கொளவொண்ணுதவேற்கணார்குமுதச்செவ்வாய்
ற்றூறுதீந்தேன்மாந்தினர்மயங்குவாரை (௱௰௨)

றுகணவர்தம்மைநலையுறப்பிரிந்துநல்கு
முலையுறுகலவைதீயமுள்ளிலாமுளரிச்செங்கேழ்
மலர்பிசைமலர்பூத்தென்னமலர்க்கையாவதனந்தாங்கி
உலவருமுயிரிநோடுநெடிதிருந்துயிர்க்கின்றாரை (௱௰௩)

எதிபங்கொழுநர்கம்பாலெய்நியசலத்தர்வைகும்
தாநிபங்குமளிச்சேக்கையுயிரிலாவுடலிற்சார்வார்
மாதுயர்க்காதறூஉடவழிபின்மேல்வைத்தகண்ணர்
தாநியர்முறுவலேனுக்கியுயிர்வுத்துதுடிக்கின்றுரை (௱௰௪)

சங்கொடுசிலம்புதாவும்பாதசாலகமுந்தாழப்
பொங்குபடர்முரசமார்ப்பவில்லுறைதெய்வம்பேணிக்
கொங்கலர்கூந்தற்செவ்வாயரம்பையர்பாணிகொட்டி
மங்கலகீதம்பாடமலர்ப்பலிவகுக்கின்றுரை (௱௰௫)

இழைதொடர்வில்லும்வாளுமிருளொடுமலையயாணர்க்
குழைதொடர்நயனக்கூர்வேல்குமரர்நெஞ்சுருவக்கோட்டி
மூழைதொடர்சங்கம்பேரிமுகிலெனமுழங்கமூரி
மழைதொடர்மஞ்ஞையன்னவிழாவொடுவருகின்றுரை (௱௰௬)

பள்ளியின்மைந்தரோடும்உயபண்புநீங்கி
ஒள்ளியகலவிப்பூசலுடற்றுதற்கருத்தநெஞ்சர்
மெள்ளவேயிமைபைநீக்கியஞ்சனவிழுதுமேய்ந்த
கள்ளவாணெடுங்கணென்னும்வாளுறைகழிக்கின்றுரை (௱௰௭)

ஓவியமனையமாதருடனுணர்வோடுள்ளம்
மேவியகரணமற்றுங்கொழுநரோடொழியயாணர்த்
தூவியம்பேடையென்னமின்னெனத்துவளமேவகி
ஆவிபுந்தாமுமேசென்றருங்கதவடைக்கின்றுரை (௱௰௮)

இன்னரமிதுனம்பாடவெண்மழைகிழித்துத்தோன்று
மின்னெனத்தரளம்வேய்ந்தவெண்ணிறவிமானமூர்ந்து
பன்னகமகளிர்சுற்றிப்பலாண்டிசைபரவப்பண்ணைப்
பொன்னகர்வீதிதோறும்புதுமணபுகுகின்றுரை (௱௰௯)

கோவையுங்குழையுமின்னக்கொண்டலின்முரசமார்ப்பத்
தேவர்வந்தாசிகூறமுனிவர்சோபனங்கள்செப்பப்
பாவையர்குழாங்கள்சூழப்பாட்டொடுவானநாட்டுப்
பூவையர்பலாண்டுகூறப்புதுமணம்புணர்கின்றுரை (௱௨௰)

இயக்கியரரக்கிமார்களுகியமெஞ்சில்விஞ்சை
மயக்கறைமலராத்திங்கண்முகத்தியர்முதலினேரை
மயக்கறநாடிமேவகுமாருநிமலியின்வைகும்
இயக்கமிறுயிர்க்கிக்கும்பகருணைக்கண்ணிற்கண்டான். (௱௨௧)

## வேறு.

ஓசனையேழுடன்றுயர்ந்தவும்பரின்
வாசவன்மணிமுடிகவித்தமண்டபம்
ஏசறவிளங்கியதிருவினையெண்வகை
ஆசையினிலைகெடவலைக்கலான்றது. (௱௨௨)

அன்னதனடுவணோர்மணிமீமிசைப்
பன்னகவரசெனப்பரவைதானெனத்
துன்னிருளொருவழித்தொக்கதாமென
உன்னருந்தீவினையுருக்கொண்டென்னவே. (௱௨௩)

முன்னிபாயணைகடன்முழுகிமூவகைத்
தன்னியல்பதியொடுசெழுவித்தாதுகு
மன்னெனுங்கற்பகவனத்துள்வைகிய
இன்னிளந்தென்றல்வந்திழுகியேகவே. (௱௨௪)

வானவர்மகளிர்கால்வருடமாமதி
ஆநனங்கண்டமண்டபத்துளாய்கதிர்க்
கானதுநாந்தமீகான்றகாமர்நீர்
தூநிறநறுந்தளிமுகத்திற்றூற்றவே. (௱௨௫)

ஊசியவுயிர்ப்பெனுமூழ்துவாதமும்
வாசலின்புறத்திடைநிறுவிவன்மையான்
நாசிபினளவையினடத்தக்கண்டவன்
கூசினன்குதித்தனன்விதிர்த்தகையினான். (௱௨௬)

ஊழிபின்றொகைவிசும்பணவப்போய்ப்புகும்
கேழிலவ்வங்கிளர்கிடையுயிர்ப்புக்கேடிலா
வாழிபவுலகெலாந்துடைக்குமாருதம்
ஊழியின்வரவுபார்த்துழல்வதொத்ததே (௱௨௭)

பகையெனமதியினைப்பகுத்துப்பாடுற
வகையில்பேழ்வாய்மடித்தருந்துவானெனப்
புகையொடுமுழங்குபேருயிர்ப்புப்பொங்கிய
நகையிலாமுழுமுகத்தெயிறுநற்றவே. (௱௨௮)

தடைபுகுமந்திரந்தகைந்தநாகப்போல்
இடைபுகலரியதோருறக்கமெய்தினான்
கடையுகமுடிவெனுங்காலம்பார்த்தயல்
புடைபெயராநெடுங்கடலும்போலவே (௱௨௯)

### வேறு.

ஆவதாகியதன்மையவரக்கனையரக்கர்
கோமகனென்றுநின்றதுணிவிலியிவனெனக்கொண்டான்
காவலாட்டங்கள்பொறிபுகக்கனலெனக்கனன்றான்
ஏவமேவியவன்றமூவரிலொருவனுமீட்டான் (௱௩௰)

குறுகிநோக்கிமற்றவன்றலைபொருபதுங்குறித்த
இறுகுதிண்புயமிருபதுமிங்கிவனிலனென்று
மறுகிபேறியமுனிவெனும்வடவைவெங்கனலை
அறிவெனும்பெரும்பரவையம்புனலினாலவித்தான் (௱௩௧)

அவித்துநின்றவனினுமாகவென்றங்கை
கவித்துநீங்கிடச்சலபமலன்பதுகருதாச்
செவிக்கத்தேனெனவிராகவன்புகழினைத்திருத்தும்
கவிக்குநாயகனனையவனுறைபுலைக்கடந்தான் (௱௩௨)

மாடகூடங்கண்மாளிகையோளிகைமகளிர்
ஆடரங்குகளம்பலந்தேவராலயங்கள்
பாடல்வேதிகைபட்டிமண்டபமுதற்பலவும்
நாடிமேயினனிராகவன்புகழெனுநலத்தான் (௱௩௩)

மணிகொள்வாயிலுட்சாளரத்தாள்களின்மலரில்
கணிகொணாத்தூற்சாலினும்புகையினுங்கலக்கும்
நுணுகுதும்பிங்குமற்றவணிலையாவரோநுவல்வார்
அணுவின்மேருவினூடுபாயெனச்செலுமநுமன் (௱௩௪)

வந்தவிவ்வகையெவ்வழிமருங்கினுமெய்திக்
காந்தண்மெல்விரன்மடந்தையர் யாரையுங்காணான்
வேந்தர்வேதியர்மேலுளோர்கீழுளோர்விரும்பப்
போந்தபுண்ணியன்கண்ணகன்கோயிலுட்புக்கான்

பளிக்குவேதிகைப்பவளத்தின்கூடத்திற்பசுந்தேன்
துளிக்குங்கற்பகப்பந்தரிற்கருநிறத்தோரை
வெளித்துவைகுவதருமையென்றவருருமேவி
ஒளித்துவாழ்கின்றதருமமன்னான்றனையுற்றான் (௱௩௫)

உற்றுநின்றவனுணர்வைத்தன்னுணர்வினாலுணர்ந்தான்
குற்றமில்லதோர்குணமுளனிவனெனக்கொண்டான்
செற்றநீங்கியமனத்தினனொருசிறைசென்றான்
பொற்றைமாடங்கள்கோடியோர்நொடியிடைப்புக்கான் ( )

முந்தரம்பையர்முரலினர்முழுமதிமுகத்துச்
சிந்துரப்பயில்வாய்ச்சியர்யாரையுந்தெரிந்து
மந்திரம்பலகடந்தவன்மணத்தின்முன்செல்வான்
இந்திரன்சிறையிருந்தவாயிலின்கடையெதிர்ந்தான் (௱௩௮)

எதியேந்தியதடக்கையர்பிறையெயிறிலங்க
மூதுரைப்பெருங்கதைகளும்பிறர்களுமொழிவார்
ஓதிலாயிரமாயிரமுணர்விலியரக்கர்
காதுவெஞ்சினக்களியினர்காவலைக்கடந்தான் (௱௩௯)

முக்கணோக்கினன்முதன்மகனறுவகைமுகனும்
திக்குநோக்கியபுயங்களுஞ்சிலகரத்தனையான்
ஒக்கநோக்கியர்குழாத்திடையுறங்குகின்றானைப்
புக்குநோக்கினன்புகைபுகாவாயிலுட்புகுவான் (௱௪௰)

வளையும்வாளெயிற்றரக்கனோகணிச்சியான்மகனோ
அளையில்வாளரியனையவன்யாவனோவறியேன்
இளையவீரனுமேந்தலுமிருவரும்பலநாள்
உளையவுள்ளபோரிவனொடுமுளதெனவுணர்ந்தான் (௱௪௧)

இவனையின்றனையுடையபோரிராவணனெனினே
புவனமூன்றையும்வென்றதோர்பொருளெனப்புகறல்
சிவனைநான்முகத்தொருவனைத்திருநெடுமாலாம்
அவனையல்லவர்நிகர்ப்பவரொன்றதுமறிவோ (௱௪௨)

என்றுளம்மறித்திடைநின்றுகாலத்தையிகப்ப
தன்றுபோவதென்றாயிரமாயிரத்தடங்காத்
துன்றுமாளிகைபோளிகடுரிசறத்துருவிச்
சென்றுதேடினனிந்திரசித்தனைத்தீர்ந்தான் (௱௪௩)

அக்கன்மாளிகைகடந்துபோய்மேலதிகாயன்
தொக்ககோயிலும்பொருநர்களில்லமுந்துருவித்
தக்கமந்திரத்தலைவர்கண்டனைகளுந்தாவிப்
புக்குநீங்கினனிராகவன்கழலினைப்புகழோன் (௱௪௪)

இன்னராமிரும்பெரும்படைத்தலைவர்களிருக்கைப்
பொன்னின்மாளிகையாயிரகோடியம்புக்கான்
கன்னிமாநகர்ப்புறத்தகன்கரந்துறைகாண்டான்
சொன்னமூன்றினுநடுவணத்தகழியைத்தொடர்ந்தான் (௱௪௫)

தனிக்கடக்களிறெனவொருதுணையிலான்றுய
பனிக்கடற்பெருங்கடவுடன்பரியுயந்துடைட்பான்
இனிக்கடப்பதன்றேழ்கடல்கிடந்ததென்றிசைத்தால்
கனிக்கடற்கதிர்தொடர்ந்தவனகழியைக்கண்டான் (௩௪௬)

பாழிநன்னெடுங்கிடங்கெனப்பார்வரோற்பல்லோர்
ஊழிகாலத்தின்றுலகெலாங்கலவினுமுலவா
ஆழிவெஞ்சினத்தரக்கனையஞ்சியாழ்கடல்கள்
ஏழுமிந்நகர்சுலாயதுகொலாமெனவிசைத்தான் (௩௪௭)

ஆயதாகியவகன்புனலகழியையடைந்தான்
தாயமேவலயினிருமடிவிசைகொடுதாவிப்
போயகாலத்தும்போக்கரிதென்பதுபுகன்றான்
நாயகன்புகழ்நடந்தபேருலகெலாநடந்தான் (௩௪௮)

வேறு

மேக்குநால்வகைமேகமுங்கீழ்விழத்
தூக்கிலலன்னதோயத்ததாய்த்துயர்
ஆக்கினன்படையன்னவகழியை
வாக்கினலுரைவைக்கலுமாகுமோ (௩௪௯)

ஆனமும்மதமும்பரியாழியும்
வானமங்கையர்குங்குமவாரியும்
நானமாதர்நறைக்குழலாவியும்
தேனுமாரமுந்தேய்வவுதாறுமால் (௩௫௰)

உன்னுநாமமகன்றில்புதாவுளில்
அன்னங்கோழி-ண்டானங்களாழிப்புள்
கின்னரங்குரண்டங்கிலுக்கஞ்சிரல்
சென்னங்காகங்குலைஞ்சிலம்புமே (௩௫௧)

நலத்தமாதர்நறையகிலாவியும்
அலத்தகக்குழம்புஞ்செறிந்தாடிய
விலக்கணக்கரியோடிளமென்னடைக்
குலப்பிடிக்குமொருடல்கொடுக்குமால் (௩௫௨)

நறவுநாறியநாண்முறுந்தாமரை
துறைகடோறுமுகிழ்த்தனதோன்றுமால்
சிறையினெய்தியசெல்விமுகத்திலே
றுறவுதாமுடையாரொடுங்காரகளேர் (௩௫௩)

பளிங்குசெற்றிக்குயிற்றியபாயொளி
விளிம்பும்வெள்ளமுமெய்தெரியாதுமேல்
தெளிந்தசிந்தையருஞ்சிறியார்களோ
டளிந்தபோதறிதற்கெளிதாவரோ (௱௫௪)

நீலமேமுதனன்மணிநித்திலம்
மேலகீழபல்வேவொருளிவீசலால்
பாலிக்வேலைமுதற்பலவேலையும்
கால்கலந்தனவோவெனக்காட்டுமே (௱௫௫)

அன்னவேலையகழியையார்கலி
என்னவேகடந்திஞ்சியும்பிற்படத்
துன்னருங்கடிமாநகர்துன்னினன்
பின்னரெய்தியதன்மையும்பேசுவாம். (௱௫௬)

கரியநாழிகைபாதியிற்காலனும்
வெருவியோடுமரக்கர்தம்வெம்பதி
ஒருவனேயொருபன்னிருயோசனைத்
தெருவுமும்மைநூறுயிரந்தேடினன். (௱௫௭)

வேறு.

வேரியுமடங்கினநெடுங்கடல்விளம்பும்
பாரியுமடங்கினதடங்கியதுபாடல்
காரியமடங்கினர்கள்கம்பியர்கண்மும்மைத்
தூரியமடங்கினதொடங்கியதுறக்கம். (௱௫௮)

இறங்கினதிறங்கொள்பரியேமமுறவெங்கும்
கறங்கினமறங்கொளெயில்காவலர்துடிக்கண்
பிறங்கினர்நறுங்குழலிரங்பர்பிரியாமாதார்
உறங்கினர்பிணங்கியெதிரூடினவரல்லார். (௱௫௯)

வடந்தருகடங்கொள்புயமைந்தர்கலவிப்போர்
கடந்தனரிடைந்தனர்களித்தமயில்போலும்
மடந்தையர்கடந்தனமுகட்டிடைமயங்கிக்
கிடந்தனர்நடந்ததுபுணர்ச்சிதருகேதம். (௱௬௰)

வாமநறையின்றுறைமயங்கினர்மறந்தார்
காமநறையின்திறநுகர்ந்தனர்களித்தார்
பூமணநறைவண்டறையலங்கமளிபுக்கார்
தூமநறையின்றுறையின்றிலர்துயின்றார். (௱௬௧)

பண்ணிமையடைத்தபலகட்பொருநர்பாடல்
விண்ணிமையடைத்தனவிளைந்ததிருள்வீணை
தண்ணிமையடைத்தனதழங்கிசைவழங்கும்
கண்ணிமையடைத்தனவடைத்தனகபாடம். (௱௯௨)

விரிந்தனநரந்தமுதல்வெண்மலர்விளாகத்
துரிஞ்சவருதென்றலுயிரின்புடையுலாவச்
சொரிந்தனகருங்கண்வருதுள்ளிதருவெள்ளம்
எரிந்தனபிரிந்தவர்தமெஞ்சுதலினெஞ்சம். (௱௯௩)

இளக்கரிழுதெஞ்சவிழுமெண்ணருவிளக்கைத்
துளக்கியதுதென்றல்பகைசேரவுயர்வோரின்
அளக்கரொடளகரியவாசையுறவீசா
விளக்கினம்விளக்குமணிமெய்யுறுவிளக்கம். (௱௯௪)

நித்தநியமத்தொழிலராய்நிறையுஞானத்
தத்தமுறுறங்கினர்கள்யோகியர்துயிலோர்
மத்தமதவெங்களிறுறங்கினமயங்கும்
பித்தருமுறங்கினரினிப்பிறரிதென்னும். (௱௯௫)

ஆயபொழுதம்மதிலகத்தரசர்வைகும்
தூயதெருவொன்றொருகோடிதருவிட்போய்த்
தீயவனிருக்கையயல்செட்டவகழிஞ்சி
மேயதுகடந்தனன்வினைப்பகையைவென்றான். (௱௯௬)

வேறு.

போரியற்கைப்பிராவணன்பொன்பணை
சீரியற்கைநிரம்பியபதிங்களாத்
தாரகைக்குழுவிற்றழுவித்தொடர்
நாரியர்க்குறைவாயிடநண்ணினான். (௱௯௭)

முயற்கருங்கறைநீங்கியமொய்ம்மதி
அயர்க்கும்வாண்முகத்தாரமுதன்னவர்
இயக்கர்மங்கையர்யாவருமீண்டினார்
நயக்குமாளிகைவீதியைநண்ணினான். (௱௯௮)

தழைந்தமொய்யொளிபெய்மணித்தாழ்தொறும்
இழைந்தநாலினுமின்னிளங்காலினும்
நுழைந்துநொய்தினின்மெய்யறநோக்கினான்
விழைந்தவெவ்வினைவேரறவீசினான். (௱௯௯)

அத்திரம்புனையாணரக்கன்மேல்
வைத்தசிந்தையர்வாங்குமுயிர்ப்பினர்
பத்திரம்புரைநாட்டம்பதைப்பறச்
சித்திரங்களெனவிருந்தார்சிலர். (௱௭௰)

வள்ளல்வெஞ்சரமாரனையஞ்சியோ
மெள்ளவேகனவின்பயன்வேண்டியோ
கள்ளமென்சொலறிந்திலங்கண்முகிழ்த்
துள்ளமின்றியுறங்குகின்றார்சிலர். (௱௭௧)

பழுதின்மன்மதன்வெங்கணைபன்முறை
உழுதகொங்கையருசலுயிர்ப்பினர்
அழுதுசெய்வதென்றுணையரக்கனை
எழுதலாங்கொலென்றெண்ணுகின்றார்சிலர். (௱௭௨)

ஆவதொன்றருளாயெனதாவியைக்
கூவுகின்றிலைகூறலைசென்றெனப்
பாவைபேசவும்பார்கண்பனிப்புறப்
பூவையோடும்புலம்புகின்றார்சிலர். (௱௭௩)

ஈரத்தென்றலிழுதமெலிந்துதம்
பாரக்கொங்கையைப்பார்த்தனர்பாதகன்
வீரத்தோள்களின்வீக்கநினைந்துயிர்
சோரச்சோரத்துளங்குகின்றார்சிலர். (௱௭௪)

நக்கசெம்மணிநாறியநாணிழல்
பக்கம்வீசுறுபள்ளியிற்பல்பகல்
ஒக்கவாசையுலக்கவுலந்தவர்
செக்கர்வான்றருதிங்களொத்தார்சிலர்.

வாளிறுற்றெளிகற்பகவல்லியர்
தோளிறுற்றியதுங்கமளித்துயில்
நாளிறுற்செவியிற்புகநாமபாழ்த்
தேளிறுற்றிகைப்பெய்துகின்றார்சிலர். (௱௭௬)

கவ்வுதிக்கணைமேருவைக்காலலைத்
தெவ்விறன்மலைமேயந்திரியவேந்துதோள்
வவ்வுசாந்துதம்மாமுலைவெளவிய
செவ்விகண்டுகுலாவுகின்றார்சிலர் (௱௭௭)

கூடிநான்குயர்வேலையுங்கோக்கநின்
றாடினான்புகழங்கைநரம்பினால்
நாடிநாற்பெரும்பண்ணுநயப்புறப்
பாடினான்பெயர்பாடுகின்றார்சிலர் (௱௭௮)

இனையதன்மையியக்கியமெய்திய
மனையொராயிரமாயிரகோடியாம்
அனையவன்குலத்தாயினபாரிடம்
நினைவினெய்தினனீதியினெய்தினான் (௱௭௯)

வேறு

எரிசுடர்மணியின்செங்கேழிளவெயிலிடைவிடாது
விரியிருள்பருகிநாளும்விளக்கின்றிவிளங்குமாடத்
தரிவையர்தழுவுநீங்கவாசையுந்தாமுமேயாய்
ஒருசிறையிருந்தும்போனவுள்ளத்தோடுவாரும் (௱௮௰)

நகையெரிக்கற்றைநெற்றிநாவிதோய்ந்தனையவோரி
புகையெனத்தும்பிசுற்றப்புதுமலர்பொங்குசேக்கை
பகையெனவ்வகியான்றபளிங்குடைச்சிதப்பள்ளி
மிகையொடுங்காதகாமவிம்மலின்வெதும்புவாரும் (௱௮௧)

சவிபடுதகைசால்வானந்தொருமேனியாகக்
குவியுமீனாரமாகமின்கொடிமருங்குலாகக்
கவிரொளிச்செக்கர்க்கற்றையோதியாமனை
அவிர்மதிநெற்றியாகவந்திவாளொக்கின்றாரும் (௱௮௨)

பானுவின்கண்ணும்வண்ணப்படிமுறைமாறட்டண்ணைச்
சோனைபோன்றளிகள்பம்புஞ்சுரிகுழற்கற்றைசோர
மேனிமிர்ந்தெழுந்தமாடவெண்ணிலாமுன்றினண்ணி
வானமீன்கையின்வாரிமணிக்கழங்காடுவாரும் (௱௮௩)

உழைபுழைபரந்தவானயாற்றுநின்றும்பர்நாட்டுக்
குழைமுகத்தாயர்தந்தபுனல்குளிர்ப்பிலவென்றாடி
இழைதொடுத்திலங்குமாடமிடைதடுமாறவேறி
மழைபொதுத்தொழுகுநீரான்மஞ்சனமாடுவாரும் (௱௮௪)

பன்னகவரசர்செங்கேழ்ப்பணாமணிவலிதிற்பற்றி
இன்னுயிர்க்கணவனீந்தானெனவிருததிவிஞ்சை
மன்னவர்முடியும்பூணுமாரமும்பணையமாகப்
பொன்னணிபலகைச்சூதுதுயிலிலர்பொருகின்றாரும் (௱௮௫)

தென்னகுகுடமுட்பாடல்சித்தியரிசைப்பத்திச் சொற்
பன்னகமகளிர்வள்வார்த்தண்ணுமைபாணிபேணப்
பொன்னகர்த்தரளப்பந்தர்கற்கப்பொதும்பர்பொற்றேள்
இன்னகையரம்பைமாணையாடல்கண்டிருக்கின்றாரும் (௩௮௬)

ஆணியிற்கிடந்தகாதலகஞ்சுடவருவியுண்கண
சேணுயருறக்கந்தீர்ந்தசிந்தையர்செய்வதோரார்
வீணையுங்குழலுந்தத்தமிடறும்வேற்றுமையுந்தீர்ந்த
பாணிகளளந்தபாடலமிழ்துகப்பாடுவாரும் (௩௮௭)

தண்டலைவாழையன்னகுறங்கிடையல்குற்றட்டில்
கொண்டபூந்துகிலுங்கோவைகலைகளுந்சோரககூர்ங்கள்
உண்டலமந்தகண்ணேடுசெலிட்டுலாவுகின்ற
குண்டலந்திருவில்வீசக்குரவையிற்குழற்றுவாரும் (௩௮௮)

நச்செனக்கொடியநாகக்கள்ளொடுகுருதிநக்கிப்
பிச்சரிற்பிதற்றியல்குற்பூந்துகில்கலாபப்பீறிக்
குச்சரித்திறத்திறைசைகளங்கொளக்குழக்கொண்டிண்டிச்
சச்சரிப்பாணிகொட்டிநிறைதடுமாறுவாரும் (௩௮௯)

தயிர்த்திறச்துறு ளந்தள்ளுறவறிவுதள்ளிப்
பயிர்வுறத்தெய்வமன்ம்மற்படிர்ததுபார்மினென்று
உயிர்நயிரத்திரண்டுகையுமுசசிமேலுபரநீட்டி
மயிர்சிலிர்த்துட லுங்கூசிவாய்விரித்தொடுங்குவாரும் (௩௯௦)

இத்திறத்தரக்கிமார்களீரிருகோடியீட்டப்
பத்தியருறையுந்தெய்வப்படர்நெடுந்தெருவும்பார்த்தான்
சித்தியருறையுமாடத்தெருவும்பின்னைச்சென்றான்
உத்திசைவிஞ்சைமாதருறையுளைமுறையினுற்றான் (௩௯௧)

வேறு

வளர்ந்தகாதலர்மகரிகைநெடுமுடியரக்கனைவரக்காணர்
தளர்ந்தசிந்தைதம்மிடையினுநடுங்கிடவுயிரொடுசடுமாறிக்
களந்தவாநெடுங்கருவியிற்கைகளிற்செயிரியர்கலைகட்கணால்
அளந்தபாடல்வெவ்வரவுதஞ்செவிபுகவலமரலுறுகின்றார் (௩௯௨)

புரியுநன்னெறிமுனிவரும்புலவரும்புகலிலாப்பொறைகூர
எரியும்வெஞ்சினத்திகலுடைகொடுந்திறலிராவணற்கென்றான்றும்
பரியுநெஞ்சினரிவரெனவயிர்த்ததோர்பகைகொடுபனிதரிங்கள் [றார்
செறியும்வெங்கதிர் துணைமுலைக்குவைசுடுங் கொடிகளிற்றுடிக்கின்

# ஊர்தேடுபடலம்

சிறுகுகாலங்களூழிகளாம்வகைதிரிந்துசிந்தனை சிந்த
முறுதகாக்கவின்மேவதனையுழப்பவர்முயங்கினர்முலைமுன்றில்
இறுதசேர்ந்தமுமெழுதுநற்குறிகளுமின்னுயிர்ப்பொறைபேர ற
மறுகுவாட்கண்கள்சிவப்புறமேநாக்கினர்வயிர்த்தனருயிர்க்கின்றார் ()

ஆயவிஞ்சையர்மடந்தையருறைவிடமாமிரண்டமைகோடி
தூயமாளிகைநெடுந்தெருத்துருவிப்போய்த்தொலைவில்மூன்றுலகி
நாயகன்பெருங்கோயிலைநண்ணுவான்கண்டனனளிர்திங்கள் [ற்சும்
மாயநந்தியவண்முகத்தொருதனிமயன்மகளுறைமாடம் (௱௬௫)

கண்டுகண்ணெடுங்கருத்தொடுமிடாவினன்காரணங்கடைநின்ற
துண்டுமேவரெருசிறப்பெங்கணுயகர்க்குயிரினுமுரியாளைக்
கொண்டுபோந்தவன்வைத்ததோருறையுள்கொலகுல மணிபணைக்கெ
ல்லாம் விண்டுவின்றடமார்பினின்மணியொத்ததிது வெனவியப்புற்
[றான். (௱௬௬)

அரம்பைமேனகைதிலோத்தமையுருப்பசியாதியர்மலர்க்காமன்
சரம்பெய்தூணிம்பாறளிரடிநாந்தொடச்சாமரைபணிமாறக்
கரும்பைபுஞ்சுவைகைப்பித்தசொல்லியர்காமரங்கனியாழின்
நரம்பினின்னிசைசெவிபகநாசியிற்கற்பகவிரைநாற (௱௬௭)

விழைவுநீங்கியமேன்மைபோராயினுங்கீழ்மையோர்வெருள்வுற்றால்
பிழைகொளன்மையொல்பெறுவதென்றையுறு பீழையாற்பெருந்
தென்றல்-உழைபர்கூவப்புக்கேதெனப்பெயர்வதோருசலினுளதாகு
பழையம்யாமெனப்பணிபலசெய்வரோயரிணிதர்பயனோவார் [ப்()

இன்னதன்மையிநெரிமணிவிளக்கங்களெழில்கெடப்பொலிகின்ற
தம்னதின்னொளிதழைப்புறத்துயில்வுறுதையலைத்தகைவிலலான்
அன்னளாகியசானகியிவளெனவயிர்த்தகத்தெழுவெந்தீ
துன்னுமாருயிருடலொடுசுடுவதோர் துயருழந்திவைசொன்னான் ()

எற்புவான்றொடர்யாக்கையாற்பெறும்பய னிகந்தனெனிதுநிற்க
அற்புவான்றனையிற்பிறப்பதனொடுமிகழ்ந்துதன்னருந்தெய்வக்
கற்புநீங்கியகனங்குழையிவளெனிற்காகுத்தன்புகழோடும் [ன்
பொற்பும்யானுமிவ்விலங்கையுமரக்கரும் பொன்றுதுமின்றென்று

மானுயர்த்திருவடிவினளவளிவண்மாறுகொண்டனள்கூடின்
தானியக்கியோகானவர்தையமேலோவையுறுத்தகையாளுள்
கானுயர்த்ததாரிராமன்மேனெச்கியகாதல்காரிகையார்க்கு
மீனுயர்த்தவன்மருங்குதான் மீளுமோநினைந்த மிகையென்றான்.

இலக்கணங்களுஞ்சிலவுளவென்னினுமெல்லைசென்றிலதல்லா
அலக்கணெய்துவதணியதுண்டென்றெடுத்துரைகுவதிவள்யாக்கை
மலர்க்கருங்குழல்சோர்ந்துவாய்வெரீஇச்சிலமாற்றங்கள்பறைகின்ற
உலக்குமிங்கிவள்கணவனுமழிவுமிவ்வியனகர்க்குளதென்றான். [ள்

என்றுணர்ந்துநின்றேமுறுமிந்நிலைநிற்கவித்திறனென்னாப்
பின்றுசிந்தையன்பெயர்ந்தனனெடுமலைபிற்படப்பெரும்மருங்
குன்றுகுன்றியசகையுறவோங்கியகொற்றமாளிகைதன்னில்
சென்றுபுக்கனனிராவணற்கெடுப்பருங்கிரியெனத்திரடோளான் ()

நிலந்துடித்தனநெடுவரைபொடித்தனநிருதர்சங்குலமாதர்
பொலந்துடிக்கடைமருங்குல்போற்கண்களும்புருவமும்பொற்றோ
வலந்துடித்தனமாதிரந்துடித்தனதடித்தின்றிமதிவானம் [ளும்
கலந்திடித்தனவெடித்தனபூரணமங்கலக்கலசங்கள். (௨௱௪)

புக்குநின்றுதன்புலன்கொடுநோக்கினன்பொருவருந்திருவுள்ளம்
நெக்குநின்றனனீங்குமந்தோவிந்தநெடுநகர்த்திருவென்னா
எக்குலங்களின்யாவரோயாயினுமிருவினையெல்லோர்க்கும்
ஒக்குமூழ்முறையல்லதுவலியதொன்றில்லெனவுணர்வுற்றான் (௨௱௫)

நூற்பெருங்கடனுணங்கியகேள்வியனோக்கினனியனென்றாள்
வேற்பெருங்கடல்புடைபரந்தீண்டியவெள்ளிடைவியன்கோயில்
பாற்பெருங்கடற்பன்மணிப்பஃறிரைப் பரப்புடைப்படர்வேலை
மாற்பெருங்கடல்வதிந்ததேயனையதோர்வளப்பினன்றுயில்வானை ()

சூழவிஞாயிறுகுன்றிவர்ந்தனையனகுருமணிநெடுமோலி
இழைகளோடுநின்றிளவெயிலெறித்திடவிரவெனும்பொருள்வீய
முழைகொண்மேருவின்பொருட்டிடைக்கனகனைமுருக்கியமுரடசீ
யம்- தழைகொடோளொடுதலைபலபரப்பிமுன்றுயில்வதோர்தகை
[யானை. (௨௱௭)

ஆயபொற்கலத்தாய்வளையரம்பையராயிரரணிநின்று
தூயபொற்கவரித்திரளியக்கிடச்சுழிபடுபசுங்காற்றின்
வீயகற்பகத்தேன்றுளிவிராயனவீழ்தொறுநெடுமேனி
தீயநற்றொடிச்சீதையைநினைதொறுமுயிர்த்துயிர்தேய்வானை (௨௱௮)

குழந்தைவெண்மதிக்குடுமியநெடுவரைகுலுக்கியகுலத்தோளைக்
கழிந்துபுக்கிடைகரந்தனவநங்கன்வெங்கடுங்கணைபலபாய
உழந்தவெஞ்சமத்துயர்திசையானையினொளிமருப்புற்றிற்ற
பழந்தழும்பினுக்கிடையிடையேசிலபசும்புண்களசும்பூற (௨௱௯)

சாந்தளாவியகல்வைமேற்றவழ்வுறுதண்டமிழ்ப்பசுந்தென்றல்
ஏந்துகாமவெங்கனலினுக்குமிழசட்டுருத்தியினுயிர்ப்பேறக்
காந்தன்மென்விரற்சனகிமேன்மனமுதற்கரணங்கள்கடிதோடப்
பாந்தணீங்கியமுழைமையெனக்குழைவுறு நெஞ்சுபாழ் பட்டானை ()

வேறு

கொண்டபேருக்கமூளத்திசைதொறுங்குறித்துமேனாள்
மண்டியசெருவில்வீரத்தோள்களால்வாரிவாரி
உண்டறுதெவிட்டிப்பேழ்வாய்க்கடைகடோறொழுகிப்பாயும்
அண்டர்தம்புகழிற்றோன்றும்வெள்ளெயிற்றமைதியானை (௨௱௰௧)

வெள்ளிவெண்சேக்கைவெந்துபொறியெழவெதும்பமேனி
புள்ளிவெண்மொக்குளென்னப்பொடித்துவோகொதித்துப்பொங்
கள்ளவிழ்மாலைத்தும்பிவண்டொடுங்கரிந்துசாம்ப [௧௧
ஒள்ளிணர்மாலைதீயவுயிர்க்கின்றவுயிர்ப்பினானை (௨௱௰௨)

தேவியமேனமியாணிற்சிந்தைமெய்த்திருவினைகப்
பூவியமளிமேலாப்பொய்புறக்குறங்குவானைக்
காவியங்கண்ணிதன்பாற்கணணியகாதனீரின்
ஆவியையுயிர்ப்பென்றூதுமம்மிபிடடைக்கின்றானை (௨௱௰௩)

மிகுந்தகை நினைப்புமுற்றவுருவெளிப்பட்டவேலை
நகுந்தகைமுகத்தன்காதலடுக்குறுமெய்யன்வார்த்தேன்
உகுந்தகைமொழிபாண்முன்னமொருவகையுறைடனுள்ளே
புகுந்தனளன்றோவென்றுமயிர்புறம்பொடிக்கின்றானை (௨௱௰௪)

மென்மொழிக்கலாபமஞ்ஞைவேட்கைதீக்கூருமேனும்
குன்றொழிநசொருமாக்குன்றினரிதிற்சேர்கொள்கைபோல
வன்மொழிக்கொற்றப்பொற்றோணமணந்தருமயிலேயன்னார்
ஒன்மொழித்தொன்றினேவரியதோமொழுக்கினானை (௨௱௰௫)

வேறு

முழுவாநின்றகருங்கடன்மீதுதயகிரியிற்சுடர்தயங்க
முழுவானென்னமின்னிமைக்குமாரம்புரளுமியல்பிற்றாய்
முழுவானவராயுலகமொருமூன்றுங்காக்குமுதற்றேவா
மழுவாணேமிகுலிசத்தின்வாய்மைதுடைத்தமார்பானை (௨௱௰௬)

வேறு.

தோடுழுகண்டார்வண்டுந்திசையானைமதந்துலைந்தவண்டுஞ்சுற்றி
மாடுழுநறுங்கலவையக்களிற்றின்சித்துரத்தைமாறுகொள்ளக்
கோடுழுதமார்பானைக்கொலையுழுதவடிவேலின்கொற்றமஞ்சித்
தாடொழுதபகைவேந்தர்முடியுழுததழும்பிருந்த சரணத்தானை ()

வேறு.

கொண்டதோருருவமாயன்குறளினுங்குறுகநின்றான்
திண்டலைபத்துந்தோள்களிருபதுந்தெரியநோக்கிக்
கண்டனன்கண்டலோடுங்கருத்தின்முன்காலஞ்செந்தீ
விண்டனகண்கள்கீண்டுவெடித்தனரோமமேனும். (௨௱௰௮)

வேறு.

தோளாற்றலென்னாகுமேனிற்குஞ்சொல்லென்னாம்
வாளாற்றண்ணளைவஞ்சித்தான்மணிமுடியென்
தாளாற்றலாலிடித்துத்தலைபத்துந்தகர்த்தென்றன்
ஆளாற்றல்காட்டேனேலடியேனாய்முடியேனே. (௨௱௰௯)

நடித்துவாழ்க்கைமையதோவடிமைசானன்றுதலைப்
பிடித்தவாளரக்கனோர்யான்கண்டுப்பிழைப்பரோ
ஒடித்துவான்றோளனைத்துந்தலைபத்துமுகைத்துருட்டி
முடித்திவ்வூர்முடித்தான்மேன்முடிவெலாமுடிந்தொழிக. ( )

என்றாக்கியெயிறடுத்திருகரனும்பிசைந்தெழுந்து
நின்றாக்கியுணர்ந்துரைப்பானேமியோன்பணியன்றால்
ஒன்றாக்கிப்பொன்றிழைத்தனுணர்வுடைமைக்குரித்தன்றால்
பின்றாக்கினிதுசாலப்பிழையாகுமெனப்பெயர்ந்தான். (௨௱௨௧)

ஆலம்பார்த்துண்டவன்போலாற்றலமைந்துளனெனினும்
சீலம்பார்க்குரியோர்களெண்ணுவதுசெய்பவோ
மூலம்பார்க்குறினுலகைமுற்றுவிக்குமுறைமையரினும்
காலம்பார்த்திறைவேலைகடவாதகடலொத்தான். (௨௱௨௨)

இற்றைப்போர்ப்பெருஞ்சீற்றமென்னேனுமுடிந்திடுக
கற்றைப்பூங்குழலாளைச்சிறைவைத்தகண்டகனை
முற்றப்போர்முடித்தவொருகுரங்கென்றான்முனைவீரன்
கொற்றப்போர்ச்சிலைத்தொழிற்குக்குறைவுண்டாமெனக்குறைந்தா[ன்.

அந்நிலையான்பெயர்ந்துரைப்பானுய்வளக்கையணியிழையார்
இந்நிலையானுடன்றுயில்வாருளரல்லரிவணிலையும்
புன்னிலையகாமத்தாற்புலர்கின்றநிலைபூவை
நன்னிலையினுளளென்னுநலனெனக்குநல்குமால். (௨௱௨௪)

என்றெண்ணியீண்டினியோர்பயனில்லையெனநினைந்தாக்
குன்றன்னதோளவன்றன்கோயிலினைப்பிற்படப்பெயர்ந்தான்
நின்றெண்ணிபுண்ணுவானந்தோவிந்தெடுத்தகரம்
பொன்றுன்னுமணிப்பூணிலொன்னப்பொருமுவான். (௨௱௨௫)

கொன்றானோ கற்பழியாக்குலமகளைக்கொடுந்தொழிலால்
தின்றானோ வெப்புறத்தேசெறித்தானோசிறையறியேன்
ஒன்றானுமுணரகிலேன்மீண்டினிப்போயென்னுரைக்கேன்
பொன்றாதபொழுதெனக்குக்கொடுந்துயரம்போகாதால். (௨௱௨௬)

கண்டுவருமென்றிருக்குங்காகுத்தன்கவிக்குலத்தோன்
கொண்டுவருமென்றிருக்கும்யானிழைத்தகோளிதுவால்
புண்டரிகநயனத்தான்பாலின்னம்போவேனோ
விண்டவரோடுடன்வீயாதியான்வாளாவிளிவேனோ. (௨௱௨௭)

கண்ணியநாள்கழிந்துளவாற்கண்டிலெனக்கனங்குழையை
விண்ணடைதுமென்றலையாண்டிருந்திவிளைந்தயான்
எண்ணியதுமுடிக்ககிலேன்யான்முடியாதிருப்பேனோ
புண்ணியமென்றொருபொருளொன்னுழநின்றுப்போயதால். ()

ஏழுநூறோசனைசூழ்ந்தெயில்கிடந்ததிவ்விலங்கை
வாழுமாமன்னுயிர்யான்காணாதமற்றில்லை
ஊழியான்பெருந்தேவியொருவரையும்யான்காணேன்
ஆழிதாயிடராழியிடையேவீழ்ந்தழிவேனோ. (௨௱௨௯)

வல்லரக்கன்றனைப்பற்றிவாயாறுகுருதியுகக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனோ
எல்லரக்கும்பினுமிவ்விராவணனுமிவ்வூரும்
மெல்லரக்கினுருக்கியுகவெந்தழலால்வேட்கேனோ. (௨௱௩௰)

வானவரோமுதலோனாவினவுவெனோவல்லரக்கன்
தானொருவனுளனாவுனைசெய்யந்தருக்கிலரால்
ஏனையர்களெங்குளைப்பாரெவ்வண்ணந்தெரிகேனோ
ஊனழியநீங்காதவுயிர்சுமந்தவுணர்விலேன். (௨௱௩௧)

எருவைக்குமகனாயசம்பாதியிலங்கையிலத்
திருவைக்கண்டனனென்றவனுரையுஞ்சிதைந்ததால்
கருவைக்குநெடுநகராக்கடலிடையேகரையாதென்
உருவைக்கொண்டின்னமுநானுமெலிந்துழல்கேனோ. (௨௱௩௨)

வடித்தாய்ப்பூங்குழலாளைவானவியட்டண்ணறியப்
பிடித்தானிவ்வடலரக்கனென்னுமாற்றம்பிழையாதால்
எடுத்தாழியிலங்கைதனையிருங்கடலினிட்டிடுவேன்
முடித்தாலையான்முடிதன்றுறைமன்றவனுணர்வான். (௨௱௩௩)

எள்ளுறையுமொழியாமல்யாண்டையுளுமுளனாய்த்தன்
உள்ளுறையுமொருவனைப்போலெம்மருங்குமுழல்வானொன்
புள்ளுறையும்வானத்தையுநோக்கியயல்போவான்
கள்ளுறையுமலர்ச்சோலையயலொன்றுகண்ணுற்றான். (௨௱௩௪)

ஊர்தேடுபடலம் – முற்றிற்று.

ஆ. படலம் - ௨ - இ - திருவிருத்தம் - ௩௱௩௰.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௩ · வது · காட்சிப்படலம்.

வேறு.

மாடுநின்றவம்மணிமலர்ச்சோலையைமருவித்
தேடியவ்வழிகாண்பெனேற்றீருமென்சிறுமை
ஊடுகண்டிலெனினிப்பின்னருரியதொன்றில்லை
வீடுவேன்மற்றிவ்விலங்கன்மேலிலங்கையைவீட்டி. (௧)

என்றுசோலைபுக்கெய்தினனிராகவன்றூதன்
ஒன்றிவானவர்பூமழைசொரிந்தனருவந்தார்
அன்றவாளரக்கன்சிறையவ்வழிவைத்த
துன்றலோதிதன்னிலையினைச்சொல்லுவான்றுணிந்தாம். (௨)

வஞ்சமாநங்குல்வாளரக்கியர்நெருக்கவங்கிருந்தார்
கஞ்சமருங்கொழுந்தென்றுமோர்துளிவரக்காணு
நஞ்சமருந்துபோனலனறவுணங்கியநங்கை
மென்மருங்குல்போல்வேறுள வங்கமுமெலிந்தாள். (௩)

துயிலெனக்கண்களிமைத்தலுமுகிழ்த்தலுந்துறந்தாள்
வெயிலிடைத்தந்தவிளக்கெனவொளியிலாமெய்யாள்
மயிலியற்குயின்மழலையாண்மானிளம்பேடை
அயிலெயிற்றுவெம்புலிக்குழாத்தகப்பட்டதன்னாள். (௪)

விழுதல்விம்முதன்மெய்புறம்வெதும்புதல்வெருவல்
எழுதலேங்குதலிரங்குதலிராமனையெண்ணித்
தொழுதல்சோருதறுளங்குதறுயருழந்துயிர்த்தல்
அழுதலன்றிமற்றயலொன்றுஞ்செய்குவதறியாள். (௫)

தழைத்தபொன்முலைத்தடங்கடந்தருவிபோய்த்தாழப்
புழைத்தபோலநீர்நிரந்தரம்பொழிகின்றபொலிவாய்
இழைக்குநுண்ணியமருங்குலாளிணைநெடுங்கண்கள்
மழைக்கணென்பதுகாரணக்குறியெனவகுத்தாள். (௬)



# காட்சிப்படலம்

அரியமஞ்சிமேனோடஞ்சனமுதலிவையதிகம்
கரியவாண்டனுந்தண்ணலினீர்கடல்புக்கவுழ்வாள்
உரியகாதலினொருவரோடொருவரையுலகில்
பிரிவெனுந்துயருருவுகொண்டாலனபிணியாள். (எ)

துப்பினிற்செய்தகைகொடுகோல்பெற்றதுளிமஞ்
சொப்பினொன்றனை நினைதொறு நெடுங்கண்களுகுத்த
அப்பினானனைந்தருந்துயருயிர்ப்புடையாக்கை
வெப்பினாற்புலர்ந்தொருநிலையுறாதமென்றுகிலாள். (அ)

அரிதுபோகவோவிதிவலிகடத்தலென்றஞ்சிப்
பரிதிவானவன்குலத்தையும்பழியையும்பாராச்
சுருதிநாயகன்வருவன்வருமென்பதோர்துணிவால்
கருதிமாதிரமனைத்தையுமளக்கின்றகண்ணாள். (கூ)

உமையினூடுருமுகத்தயல்கதுப்புறக்கவ்விச்
சுமையுடைக்கற்றை நிலத்திடைக்கிடந்ததூமதியை
அமையவாயிற்பெய்துமிழ்கின்றவயிலெயிற்றரவிற்
குமையுறத்திரண்டொருசடையாகியகுழலாள். (௰)

ஆவியந்துகில்புனைவதொன்றன்றிவேறறியாள்
தூவியன்னமென்புனலிடைத்தோய்கிலாமெய்யாள்
மேவுசெஞ்சடலமிழ்ந்துகொண்டநங்கவேள்செய்த
ஓவியம்புகையுண்டதேயொக்கின்றவுருவாள். (௰க)

கண்டிலன்கொலாமிளவலுங்கனைகடனடுவண்
உண்டிலங்கையென்றுணர்ந்திலனுலகெலாமொறுப்பான்
கொண்டிறந்தமையறிகிலராமெனக்குழையாப்
புண்டிறந்ததின்னெரிநுழைந்தாலெனப்புகைவாள். (௰உ)

மாண்டுபோயினனெருவைகட்கரசன்மன்மற்றோர்
யாண்டையென்னிலையறிவுறுப்பார்களிப்பிறப்பில்
காண்டலோவரிதென்றென்றுவிம்முறுங்கலங்கும்
மீண்டுமீண்டுபுக்கெரிநுழைந்தாலெனமெலிவாள். (௰௩)

என்னை நாயகனிவ்வலையெண்ணலாவினையேன்
சொன்னவார்த்தைகேட்டறிவிலிளைவதுறந்தானோ
[illegible]ழ்வினைமுடிக்கவோவென்றென்றுமுறையால்
[illegible]புலர்ந்துணர்வுதேய்ந்தாருயிர்பதைப்பாள். (௰௪)

அருந்துமெல்லடகாரிடவருந்துமென்றழுங்கும்
விருந்துகண்டபோதென்னுறுமோவென்றுவிம்மும்
மருந்துமுண்டுகொல்யான்கொண்டநோய்க்கென்றுமயங்கும்
இருந்தமாநிலஞ்செல்லரித்திடவுமாண்டெழாதாள். (௰௫)

வன்கண்வஞ்சனையரக்கரித்துணைப்பகல்வையார்
தின்பரென்னினிச்செயத்தக்கதென்றுதீர்ந்தாளே
தம்பிதுலப்பொறைதன்பொறையெனத்தணிந்தாளே
என்கொலெண்ணுமெவனென்னுமங்கிராப்பகலில்லாள். (௰௬)

பெற்றதாயருந்தம்பியும்பெயர்த்தும்வந்தெய்திக்
கொற்றமாநகர்கொண்டிறந்தார்களோகுறித்துச்
சொற்றவாண்டெலாமுறைந்தன்றியந்நகர்துன்னான்
உற்றதுண்டெனப்படருழந்துருகுநோயுறுவாள். (௰௭)

பூரணைத்தகுமொய்ம்பினோர்முன்பொருதவர்போல்
வரனுமாயமும்வஞ்சமும்வரம்பிலவல்லார்
பொரநிகழ்ந்ததோர்பூசலுண்டாமெனப்பொருமாக்
கரமனைத்திர்நததுகண்டனளாமெனக்கவல்வாள். (௰௮)

வேறு

தெம்மடங்கியசேணிலங்கையர்
தம்மடந்தையுந்தம்பிபதாமென
மும்மடங்குபொலிந்தமுகத்தினன்
வெம்மடங்கலையுன்னிவெதும்புவாள். (௰௯)

மெய்த்திருப்பதம்மேவென்றபோதினும்
இத்திருத்துறந்தேகென்றபோதினும்
சித்திரத்தினலர்ந்தசெந்தாமரை
ஒத்திருக்குமுகத்தினையுன்னுவாள். (௨௰)

தேங்குகங்கைத்திருமுடிச்செங்கணான்
வாங்குகோலவடவரைவார்சிலை
ஏங்குமாத்திரத்திற்றிரண்டாய்விழ
வீங்குதோளைநினைந்துமெலிந்துளாள். (௨௧)

இன்னலம்பரவேந்தற்கியற்றிய
பன்னலம்பரிஞலாயிரம்படை
கன்னன்மூன்றிற்களப்படக்கால்வினை
வின்னலம்புகழ்ந்தேற்றிவெதும்புவாள். (௨௨)

ஆழநீர்க்கங்கையம்பிகடாவிய
ஏழைவேடனுக்கெம்பிநின்றம்பிநீ
தோழன்மங்கைகொழுந்தியெனச்சொன்ன
வாழிநண்பினையுன்னிமயங்குவாள். (உ௩)

மெய்த்ததாதைவிரும்பினனீட்டிய
கைத்தலங்களைக்கைகளினீக்கிவே
றுய்த்தபோதுதருப்பையிலுண்பதம்
வைத்தவேதிகைச்செய்திமனக்கொள்வாள். (உ௪)

உரங்கொண்டமலர்ச்சென்னியுரிமைசால்
வரங்கொள்பொன்முடிதம்பிவனைந்திலன்
திரங்குசெஞ்சடைகட்டியசெய்வினைக்
கிரங்கியேங்குவதெண்ணியிரங்குவாள். (உ௫)

பரித்தசெல்வமொழியப்படருநாள்
அருத்திவேதியர்க்கான்குலமீந்தவர்
கருத்தினாசைக்கரையின்மைகண்டிறை
சிரித்தசெய்கைநினைந்தழுஞ்செய்கையாள். (உ௬)

மழுவின்வாளினன்மன்னரைமூவெழு
பொழுதினூறிப்புலவுறுபுண்ணினீர்
முழுகினான்றவமொய்ம்பொடுமுரிவில்
தழுவுமென்மைநினைந்துயிர்சாம்புவாள். (உ௭)

ஏகவாளியவ்விந்திரன்காதன்மேல்
போகவேவியதுகண்பொடித்தநாள்
காகமுற்றுமோர்கண்ணிலவாக்கிய
வேகவென்றியைத்தன்றலைமேற்கொள்வாள். (உ௮)

வெவ்விராதனைமேல்வருந்தீவினை
வவ்விமாற்றருஞ்சாபமுமாற்றிய
அவ்விராமனையுன்னித்தன்னருயிர்
வெவ்விராதுணர்வோய்ந்துடறேம்புவாள். (உ௯)

வேறு.

இருந்தனடிரிசடையென்னுமின்சொலில்
திருந்தினளொழியமற்றிருந்தீவினை
அருந்திறலரக்கியரல்லுநள்ளுறப்
பொருந்தலுந்துயிலனைக்களிபொருந்தினர். (௩௰)

ஆயிடைத்திரிசடையென்னுமன்பினாள்
தாயினுமினியவ டன்னைநோக்கினாள்,
தூயைநீகேட்டியென் றுணைவியாமென
மேயதோர்கட்டுரைவிளம்பன்மேயினாள். (௯௧)

நலந்துடிக்கின்றதோநான்செய்தீவினைச்
சலந்துடித்தின்னமுந்தருவதுண்மையோ
பொலந்துடிமருங்குலாய்புருவங்கண்முதல்
வலந்துடிக்கின்றிலவருவதோர்கிலேன். (௯௨)

முனியொடுமிதிலையின் முதல்வன்முந்துநாள்
துனியறுபுருவமுந்தோளுநாட்டமும்
இனியனதுடித்தனவீண்டுமாண்டென
நனிதுடிக்கின்றனவாய்ந்துநல்குவாய். (௯௩)

மறந்தனெனிதுவுமோர்மாற்றங்கேட்டியால்
அறந்தருசிந்தையென்னாவிநாயகன்
பிறந்தபார்முழுவதுந்தம்பியேபெறத்
துறந்துகான்புகுந்தநாள்வலந்துடித்ததே. (௯௪)

நஞ்சனையான்வனத்திழைக்குநாளிடை
வஞ்சனையால்வலந்துடித்தவாய்மையால்
எஞ்சலவீண்டுதாமிடந்துடித்தகால்
அஞ்சலென்றிரங்குதற்கடுப்பதியாதென்றாள். (௯௫)

என்றலுந்திரிசடையினைந்தசோபனம்
நன்றிதுநன்றெனநயந்தசிந்தையாள்
உன்றுணைக்கணவனையுறுதலுண்மையால்
அன்றியுங்கேட்டியென்றறைதன்மேயினாள். (௯௬)

உன்னிறம்பசப்புறவுயிருயிர்ப்புற
இன்னிறத்தேனிசையினியநண்பினால்
மின்னிறமருங்குலாய்செவியின்மெல்லெனப்
பொன்னிறத்தும்பிவந்தூதிப்போயதால் (௯௭)

ஆயதுதேரினுன்னாவிநாயகன்
ஏயதுதூதுவந்தெதிர்தலுண்மையால்
தீயதுதீயவர்க்கெய்தறிண்ணமென்
வாயதுகேளெனமதித்துக்கூறுவாள். (௯௮)

துயிலிலவாதலிற்கனவுதோன்றல
அயில்விழியொருகனவமைந்துநோக்கினேன்
பயில்வனபழுதிலபழுதிறுடென
வெயிலினுமெய்யனவுரைத்தன்மேயினாள். (௩௯)

எண்ணெய்பொன்முடிதொறுமிழுகியீறிலாத்
திண்ணெடுங்கழுதைபேய்பூண்டதேரின்மேல்
அண்ணலவ்விராவணனரத்தவாடையன்
நண்ணினன்றென்புலனவயிற்கற்பினாய். (௪௰)

மக்களுஞ்சுற்றமுமற்றுளோர்களும்
புக்கனரப்புலப்போந்ததில்லையால்
சிக்கறநோக்கினென்றியவின்னமும்
மிக்கனகேட்கெனவிளம்பன்மேயினாள். (௪௧)

ஆண்டகையிராவணன்வளர்க்குமவ்வனம்
ஈண்டனவிறந்தவாலினங்கொள்செஞ்சிகை
தூண்டருமணிவிளக்கழலுந்தொன்மனை
கீண்டதாலவானவேறெறியக்கிழைநாள். (௪௨)

பிடமதம்பிறந்தனபிறங்குபேரியும்
இடியெனமுழங்குமாவிரட்டலின்றியே
கொடியுடைமுகிற்குலமின்றித்தாவில்வாளி
வெடிபடவதிருமாலுதிருமீனெலாம். (௪௩)

விற்பகலின்றியேயிரவுவிண்டுற
எற்படவெரிந்துளதென்னத்தோன்றுமால்
மற்படமலர்ந்ததோண்மைந்தர்சூடிய
கற்பகமாலையும்புலவுகாலுமால். (௪௪)

திரியுமாலிலங்கையுமதிலுந்திக்கெலாம்
எரியுமாற்கந்தர்ப்பநகரமெங்கணும்
தெரியுமான்மங்கலகலசஞ்சிந்தின
விரியுமால்விளக்கினைவிழுங்குமாலிருள். (௪௫)

தோரணமுறிந்தனதுணியச்சூழிமால்
வாரணமுறியுமால்வலத்தவாண்மருப்
பாரணமந்திரத்தறிஞர்நாட்டிய
பூரணகுடத்துநீர்நறவுபொங்குமால். (௪௬)

விண்டொடர்மதியிணைப்பிளந்துமீனொழும்
புண்டொடர்குருதியிற்பொழியப்போர்மலைமு
தண்டொடுதிகிரிவாடனுவென்றின்னன
மண்டமர்புரியுமாலாழிமாறுற. (சஎ)

மங்கையர்மங்கலத்தாலிமற்றையோர்
அங்கையின்வாங்கினரொவருமன்றியே
கொங்கையின்வீழ்ந்தனகுறித்தவாற்றினால்
இங்கிதனற்புதமின்னுங்கேட்டியால். (சஅ)

மன்னவன்றேவியம்மயன்மடந்தைதன்
பின்னவிழோதியும்பிறங்கிவீழ்ந்தன
துன்னிருஞ்சுடர்சுடச்சுறுக்கொண்டேயின
இன்னலுண்டெனுமிதற்கேதுவீழ்ச்சன. (சகூ)

என்றனளியம்பிவேறிசைப்பக்கேட்டியால்
இன்றிவணிப்பொழுதியைந்ததோர்கனா
வன்றுணைக்கோளரியிரண்டுமாறிலாக்
குன்றிடைப்புழுவையங்குழுக்கொண்டண்டியே. (ருய)

வரம்பிலாமததரியுறையுமவ்வனம்
நிரம்புறவளைந்தனநெருக்கிநேர்ந்தன
குரம்பறுபிணப்படக்கொன்றமாறிலாப்
புரம்புகவிருந்ததோர்மயிலும்போயதால். (ருக)

ஆயிரந்திருவிளக்கமையமாட்டிய
சேயொளிவிளக்கதொன்றேந்திச்செய்யவள்
நாயகன்றிருமனைநின்றுநண்ணுதல்
மேயினள்வீடணன்கோயின்மெய்சொலாய். (ருஉ)

பொன்மனைபுக்கவப்பொருவில்போழ்தினில்
என்னைநீயுணர்த்தினைமுடிந்ததில்லெனா
அன்னையேயதன்குறைகாணலென்றயினழ
இன்னமுந்துயில்கெனவிருகைகூப்பினாள். (ருங)

இவ்விடையண்ணலவ்விராமனேவிய
வெவ்விடையனையபோர்வீரத்தூதனும்
அவ்விடையெய்தினனரிதிற்றேடுவான்
றொவ்விடைமடந்தைதன்னிருக்கைநோக்கினான். (ருச)

# காட்சிப்படலம்

அவ்வயினரக்கியரறிவுற்றம்மயேலோர்
செவ்வையிறுயினைச்செருத்ததீதெனு
எவ்வயின்மருங்கினுமெழுந்துவீங்கினர்
வெவ்வயின்மழுவெழுச்சூலவெங்கையார். (ருரு)

வயிற்றிடைவாயினர்வளைந்தநெற்றியின்
குயிற்றியவிழியினர்கொடியநோக்கினர்
எயிற்றினுக்கிடையிடையானையாளிபேய்
துயிற்கொள்வெம்பிலனெனத்தோட்டவாயினர். (ருசு)

ஒருபதுதலையினரொற்றைச்சென்னியர்
இருபதுகலையினரிரண்டுகையினர்
வெருவருதோற்றத்தர்விகடவேடத்தர்
பருவரையெனமுலைபலவுநாற்றினர். (ருஎ)

சூலம்வாள்சக்கரந்தோட்டிதோமரம்
காலவேல்கற்பணங்கற்றலகையினர்
ஆலமேயுருவுகொண்டனையமேனியர்
வாலமேதரித்தவன்வெருவும்வண்ணமயர். (ருஅ)

கரிபரிவேங்கைமாக்கரடியாளிபேய்
அரிநரிநாயெனவணிமுகத்தினர்
வெரிநுறுமுகத்தினர்விழிகண்மூன்றினர்
புரிதருகொடுமையர்புகையும்வாயினர். (ருகூ)

எண்ணினுக்களவிடலரியவீட்டினர்
கண்ணினுக்களவிடலரியகாட்சியர்
பெண்ணெனப்பெயர்கொடுதிரியும்பெற்றியர்
துண்ணெனத்துயிலுணர்ந்தெழுந்துசுற்றினர். (சூய)

ஆயிடையுரையழித்தழகன்றேவியும்
தீயினையவர்முகநோக்கித்தேம்பினள்
நாயகன்றூதனும்விரைவினண்ணினன்
ஓய்விலதுயர்மரப்பணையினும்பரான். (சூக)

அரக்கியரயின்முதலேந்துமங்கையர்
நெருக்கியகுழுவினர்துயிலுநீங்கினர்
இருக்குநர்பலரிதற்கேதுவென்னெனாப்
பொருக்கெனவவரிடைப்பொருந்தநோக்கினன். (சூஉ)

விரிமழைக்குலங்கிழித்தொளிருமின்னெனக்
கருநிறத்தரக்கியர்குழுவிற்கண்டனன்
உருநிறத்தொருதனிக்கொண்டலூழியான்
இருநிறத்துற்றவெற்கியைந்தகாந்தத்தை. (௬௩)

தொடற்கருமரக்கியர்காவல்சுற்றுளாள்
மடக்கொடிச்சீதையாமாதரோகொலாம்
கடற்றுணைநெடியதன்கண்ணினீர்ப்பெருந்
தடத்திடையிருந்ததோரன்னத்தன்மையாள். (௬௪)

வீடினதன்றறன்யானும்வீடலேன்
தேடினென்கண்டனென்றேவியேயெனா
ஆடினன்பாடினனண்டமீண்டிப்பாய்ந்
தோடினனுலாவினனுவகைத்தேனுண்டான். (௬௫)

எள்ளருமுருவினவ்விலக்கணங்களும்
வள்ளறன்னுரையொடுமாறுகொண்டில
கள்ளவாளரக்கனற்கமலக்கண்ணனா
ளுள்ளுறையுயிரினையொளித்துவைத்தவா. (௬௬)

மூவகையுலகையுமுறையினீக்கிய
பாவிதன்னுயிர்கொள்வானிழைத்தபண்பினால்
ஆவதேயையமிலரவினீங்கிய
தேவனேயவனிவள்கமலச்செல்வியே. (௬௭)

மாசுண்டமணியனாள்வயங்குவெங்கதிர்த்
தேசுண்டதிங்களுமென்னத்தேய்ந்துளாள்
காசுண்டகூந்தலாள்கற்புங்காவலும்
ஏசுண்டதில்லையாலறத்துக்கீறுண்டோ. (௬௮)

பூண்கழலிராகவன்புயத்தையோபுகழ்
வனிதையர்திலகத்தின்மனத்தின்மாண்பையோ
வணைகழலரசரின்வண்மைமிக்கிடும்
சனகர்தங்குலத்தையோயாதைச்சாற்றுகேன். (௬௯)

தேவரும்பிழைத்திலர்தெய்வவேதியர்
மூவரும்பிழைத்திலர்முழுமீதின்றால்
யாவதிங்கினிச்செயலரியதெம்பிராற்
காவவென்னடிமையும்பிழைத்தின்றுமன்றே. (௭௰)

கேழிலாநிறையிறைகண்டதாமெனில்
ஆழியான்முனிவெனுமாழிமீக்கொள
ஊழியினிறுதிவந்துறுமென்றுன்னினேன்
வாழியநலத்தினிவரம்பிறுமெலாம். (௭௧)

வெங்கனன்முழுகியும்புலன்கள்வீக்கியும்
அங்குவவருந்துவநீக்கிநோற்றவர்
எங்குளர்குலனில்வந்தில்லின்மாண்புடை
நங்கையர்மனத்தவநவிலற்பாலதே. (௭௨)

பேணநோற்றதுமனைப்பிறவிபெண்மைபோல்
நாணநோற்றுயர்ந்ததுநங்கைகோன்றலால்
மாணநோற்றீண்டிவளிருந்தவாறெலாம்
காணநோற்றிலனவன்கமலக்கண்களால். (௭௩)

முனிபவரரக்கியர்முறையினீங்கினார்
இனியவடானலாதியாருமில்லையால்
தனிமையும்பெண்மையுந்தவமுமின்னதே
வனிதையர்க்காகநல்லறத்தின்மாண்பெலாம். (௭௪)

தருமமேகாத்ததோசழக்கன்றன்வினைக்
கருமமேகாத்ததோகற்பின்காவலோ
அருமையேயநமையேயாரிதாற்றுவார்
ஒருமையேயெம்மனோர்க்குரைக்கற்பாலதே (௭௫)

செல்வமோவதுவவர்தீமையோவிது
அல்லினும்பகலினுமமரராட்செய்வார்
ஒல்லுமோவொருவர்க்கிதுறுகண்யாதினி
வெல்லுமோதீவினையறத்தைமெய்ம்மையால். (௭௬)

என்றிவையினையனவெண்ணிவண்ணவான்
பொன்றிணிநெடுமரப்பொதும்பர்புக்கவண்
நின்றனனவ்வழிநிகழ்ந்ததென்னெனின்
துன்றுபூஞ்சோலைவாயரக்கன்றோன்றினான் (௭௭)

காட்சிப்படல முற்றிற்று.

[illegible] படலம்-௩-இ திருவிருத்தம் - ௬௱௭

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.





# ச. வது. நிந்தனைப்படலம்.

சிரவண்குடுமிநெடுவரையெனவையுமொருவழித்திரண்டனசிவண
மகரிகைவயிரகுண்டலமலைப்புரைதிண்டிறற்றோள்புடைவயங்கச்
சகரவேலையினீர்தழுவியதிரைற்றலைதொறுந்தலைதொறுந்தயங்கும்
வகைபடமகுடமிளவெயிலெறிப்பக் கங்குலும்பகல்படவந்தான்.

உருப்பசியுடைவாளெடுத்தனடொடரமேனகை வெள்ளடையுதவச்
செருப்பினைத்தாங்கித்திலோத்தமைசெல்லவரம்பையர்சூழ்புடை
சுற்றக்கருப்புரஞ்சாந்துங்கலவையுமலர்நங்கலந்துமிழ்பரிமளகந்த
ம்மருப்புடைப்பொருப்போர்மாதிரக்களிற்றின்வரிக்கைவாண்முகக்
கிடைமடுப்ப. (உ)

நானநெய்விளக்கநாலிருகோடி நங்கையரங்கையிலெடுப்ப
மேனிவந்தெழுந்தமணிபுனையணியின் விரிகதிருளெலாம்விழுங்க
க்கான்முகற்றொடர்ந்தநூபுரஞ்சிலம்பக்கிண்கிணிகலையொடுங்கலிப்
பப்பானிறத்தன்னக்குழாம்படர்ந்தென்னப்பற்பலமழலையும்பகர()

அந்தரம்புகுந்ததுண்டெனமுனிவுற்றருந்துயினீங்கினுண்டை
சந்திரவதனத்தருந்ததியிருந்தகண்ணுறுஞ்சோலையின்றனையோ [ச்
மந்திரம்யாதோயாரொடும்போமோவென்றுமாமனமறுக்குறலால்
இந்திரன்முதலோரிமைப்பிலாநாட்டமுகிழ்த்தன ருயிர்ப்பவிந்திரு
[ப்ப.(ச)

நீனிறக்குன்றினெடிதினிற்றூழ்ந்த நீத்தவெள்ளருவியி னிமிர்ந்த
பானிறப்பட்டின்மாலையுத்தரியம் பண்புறப்பசும்பொ னூரத்தின்
* மானிறப்புடவியுடையுறப்பரந்த வளர்கதிரிளவெயில்பொருவச்
சூனிறக்கொண்மூக்கிழித்திடைதுடிக்கு மின்னெனமார்பினூறுளங்
[க. (ரு)

தோடொறுந்தொடர்ந்தமகரிகைவயிரக்கம்புரிவலயமாச்சுடர்கள்
நாடொறுஞ்சுடருங்கலிகெழுவிசும்பினுளொளிகோளினைநக்கத்
தாடொறுந்தொடர்ந்த தழங்குபொற்கழலின் றகையொளிநெடுநில
த்தடவத், மேடொறுந்தொடர்ந்தமுறுவல்வெண்ணிலவின் முகமலரி
ரவினுங்கிளர. (சு)

தன்னிறத்தோடுமாறுதந்திமைக்கு நீவியந்தழைபடவுடுத்த
பொன்னிறத்துசுகருவரைமருங்கிற் றழுவியபுதுவெயில்பொருவ
மின்னிறக்கதிர்ச்சுற்றியபசும்பொன் விரற்றலையிலொளிக்காசின்
கன்னிறக்கற்றைநெடுநிழல்பூத்த கற்பகமுழுவனங்கவின. (எ)

---

* நிறப்புடவி - வலித்தல்விகாரம்.

சுன்னவீரத்தகோலைவெண்டாள மூழியினிறுதியிற்றனித்த பொங்ஙெனடு வளையிற்றேற்றியகோரு நாளுமொத்திடை யிடை பொலிய, மின்னெளிமெனலிபுதயமால்வரையின் மீப்படர் வெங்கதிர்ச்செலவர், பன்னிருவரினுமிருவரைத்தவிர்வுற் றுதித்ததோர்படி யொளிபரப்ப. (௮)

பயிலெயிற்றிரட்டைப் பணைமருப்பொடியப் படியினிற்பரிபவஞ்சுமந்த, மயிலடித்தொழுக்கினனையமாமதத்த மாதிரக்காவன்மால் யானை, கயிலையிற்பிரண்டமரண்டொடர் தடந்தோட் குணகணதுயரங்கடந்த, அயிலெயிற்றரியின்சுவடுதன்கரத்தா லளந்தமாக் கரியினின்றஞ்ச. (௯)

அங்கயற்கருங்க ணியக்கியர்துயக்கி லரம்பையர் விஞ்சையர்க்கமைந்த, மங்கையர்நாகமடந்தையர்சித்தர் நாரிய ரரகியர்முதலாக் குங்குமக்கொங்கைக்குவிமுலைக்கனிவாய்க் கோகிலந்துயர்ந்தமென் குதலை, மங்கையரீட்ட மால்வளாதழீஇய மஞ்ஞையங் குழுவெனமயங்க. (௰)

தொளையுறுபழைவேய்த்தூக்கிசைக்கானந் துயல்வுறுவொருநிலைபடர, இளையவர்மிடறுமிந்நிலையிசைப்பக் கிந்நரர்முறைநிறுத்தெடுத்த, கிளையுறுபாடல்சில்லரிப்பாண்டி றழுவியமுழவொடு கெழுமி, அளையுறுமரவுமழுதுவாயுகுப்பவண்டமும்வையமுமளப்ப. (௰௧)

அன்னபூஞ்சதுக்கஞ் சாமரையுக்க மாதியாம்வரிசையிற்கமைந்த உன்னரும்பொன்னின்மணியினிற்புனைந்த விழைக்குலமுழைக்குலமனைய, மின்னிடைச்செவ்வாய்க்குவிமுலைப்பணைத்தோள் வீங்குதேசல்குலார்தாங்கி, நன்னிறக்காரின்வரவுகண்டுவக்கு நாடகமயிலெனநடப்ப. (௰௨)

தந்திரிநெறியிற்றுக்குறுகருவி தாக்கினொழுவிதச்சதியின் முந்துறுகுணிலோடியையுறுகுறட்டிற் சில்லரிப்பாண்டிவின்முறையின், மந்திரகீதத்திசைப்பதந்தொடர வகையுறநட்டனைவழாமல் அந்தரவானத்தரம்பையர்கரும்பிற் பாடலாரருகுவந்தகவ. (௰௩)

அந்திவேளநங்கனழல்படத்துரத்தவயின்முகப்பகழிவாயறுத்த வெந்துறுபுண்ணின்வேலுழைந்தாங்கு வெண்மதிப்பசுங்கதிர்விரவ மந்தமாருதம்போய்மலர்தொறும்வாரிவயங்குநீர்மம்மரின்வருதேன் சிந்துறுஞ்சிறையினிகரத்திவலையுருக்கியசெம்பெனத்தெறிப்ப ( )

இழைபுனைமருங்குலிறுமிறுமெனவுமிறுகலாவனமுலையிரட்டை உழைபுகுசெப்பினொளிதரமறைத்த வுத்தரியத்தினொல்கிக் [க் குழைபுகுகமலங்கோட்டினர்நோக்குங்குறுநகைக்குமுதவாய்மகளி மழைபுரைதடங்கட்செங்கடைபிட்ட மார்பினுந்தோளினு மலைய. ( )

மாலையுஞ்சாந்துங்கலவையும்பூணும் வயங்குறநல்கி கொடுகாசம் சோலையின்றொழுதிக்கற்பகத்தருவுநிதியமுங்கொண்டுபின்றொடர ப் பாலின்வெண்பரவைத்திரைகருங் கிரிமேற்பரந்தெனச்சாமரைப கைப்ப, வேலைநின்றுயருமுயலில்வெண்மதியின்வெண்குடைமீ துற விளங்க. (௰௬)

ஆர்தருமகழியருவரையிலங்கையடிபெயர்ந்திடுதொறுமழுந்தி நேர்தரும்பரவைப்பிறழ்திரைதவழ்ந்து நெடுந்தடந்திசைதொறுந்தி மிரச்; சார்தருங்கவ்வினையிறுடைப்பகுவா யரந்தனூர்தலைதடுமாற மூரிநீராடையிருநிலமடந்தை முதுகுளுக்குற்றனண்முரல. (௰௭)

கேடகத்தோடு மழுவெழுச்சூல மங்குசங்கர்ப்பணங்கிடுகோ டாடகச்சுடர்வாளயில்சிலைகுலிச முதலியவாயுதமனைத்தும் தாடவைக்கிரட்டியெறும்வலிக்கமைந்த தகைமையர்நட வரைபொரு க்கும், சூடகத்தடக்கைச்சுடுசினத்தடுபோரரக்கியர்தலைதொறுஞ்சும ப்ப. (௰௮)

விரிதளிர்முகைபூக்கொப்படைமுகைவேரிலைவயெலாமணிபொரு ல்விரிந்த, தருவுயர்சோலை நிலைதொறுங்கரியத் தழலுமிழுயிர்ப்பு முன்றவழத், திருமகளிருந்த திசையறிந்திருந்துந் திகைப்புறுசிந் தையன்கெடுத்த, தொருமணிநெடும்பற்பலதலையரவினுழைதொறு முழைதொறுமுலாவ. (௰௯)

இனையதோர்தன்மையெறும்வலியரக்க ரோந்தல்வந்தெய்துகின்று னை, அனையதோர்தன்மையஞ்சனைச்சிறுவன் கண்டனனைமவுறநோ க்கி, வினையமுஞ்செயலுமேல்விளைபொருளு மிவ்வழிவிளங்குமெ ன்றெண்ணி, வனைகழலிராமன்பெரும்பெயரோதி யிருந்தனன் வந் தயன்மறைந்தே. (௨௰)

ஆயிடையரக்கனரம்பையர்சூழவுமல்லவும்வேறயல்கல மேயினன்றெண்ணின்விளக்கெனுந்தகையா ளிருந்துழியாண்டவள் வெருவிப், போயினவுயிராளாமெனநடுங்கிப்பொறிவரியெறும்புலி ப்புலைக்கட், காய்சினவுழுவைதின்னியவந்தகலையிளம்பிணையெனக் கரைந்தாள். (௨௧)

வேறு.

கூசியாவி குலைவுறுவாளையும்
ஆசையாலுயிராசழிவானையும்
காசில்கண்ணிணைசான்றெனக்கண்டனன்
ஊசலாடியுளையுறுளத்தினான். (௨௨)

வாழிசானகிவாழியிராகவன்
வாழிநான்மறைவாழியரந்தணர்
வாழிநல்லறமென்றுறவாழ்த்தினான்
வாழிசோறும்புதிதுறுங்கீர்த்தியாய். (௨௩)

அவ்விடத்தரு செப்தியரக்கன்றான்
எவ்விடத்தெனக்கின்னருளீவது
நொவ்விடைக்குயிலேநுவல்கென்றனன்
வெவ்விடத்தையமிழ்தெனவேண்டுவான். (௨௪)

ஈசற்காயினுமீடழிவுற்றிறை
வாசிப்பாடழியாதமனத்தினான்
ஆசைப்பாசமிந்நானுமடர்த்திடக்
கூசிக்கூசியிணையனகூறினான். (௨௫)

இன்றிறந்தனநாளையிறந்தன
என்றிறந்தருந்தன்மையிராமலெனக்
கொன்றிறந்தபின்கூடுதியோதழை
சென்றிறங்கிமறந்தருசெங்கணாய். (௨௬)

உலகமொன்றொடிரண்டொருங்கோம்புமென்
அலகில்செல்வத்தரசியலாணையில்
திலகமேயுன்றிறத்தநங்கன்றரு
கலகமல்லதெளிமையுங்காண்டியோ. (௨௭)

பூந்தண்வார்குழற்பொற்கொழுந்தேபுகழ்
ஏந்துசெல்வமிகழ்ந்தனையின்னுயிர்க்
காந்தன்மாண்டிலன்காடுகடந்துபோய்
வாழ்ந்தவாழ்வதுமானிடர்வாழ்வன்றோ. (௨௮)

நோற்கின்றார்களுநுண்பொருணுண்ணிதின்
பார்க்கின்றாரும்பெறும்பயன்பார்த்தியேல்
வார்க்குன்றுமுலையென்சொன்மெளலியால்
ஏற்கின்றாரொடுடனுறையின்பமால். (௨௯)

பொருளும்யாழும்விளரியும்பூவையும்
மருளுநாளுமழலைவழங்குவாய்
தெருளுநான்முகன்செய்கதுன்சிந்தையின்
அருளுமின்மருங்கும்மரிதாக்கியோ. (௫௰)

ஈண்டுநாளுமிளமையுமீண்டில
மாண்டுமாண்டுபிறிந்துறுமாலைய
வேண்டுநாள்வெறிதேவிளிந்தாலினி
யாண்டுவாழவ்விடருழன்றுழந்தியோ. (௫௧)

இழவெனக்குயிர்க்கெய்தினுமெய்துக
குழைமுகத்துநின்சிந்தனைகோடலால்
பழகரிற்புறம்பண்பிலைகாமத்தோ
டழகினுக்கினியாருளராவரோ. (௫௨)

பெண்மையும்மழகும்பிறழாமனத்
திண்மையும்முதல்யாவையுஞ்செய்யவாய்க்
கண்மையும்பொருந்திக்கருணைப்படர்
வண்மையென்கொல்சனகரின்மாண்டவா. (௫௩)

வீட்டுங்காலத்தலறியமெய்க்குரல்
கேட்டுங்காண்டற்கிருத்திகொல்கிள்ளைநீ
நாட்டுங்காளெனுநல்லறத்தின்பயன்
ஊட்டுங்காலத்திகழ்வதுறுங்கொலோ. (௫௪)

தக்கதென்னுயிர்வீடெனிற்றாழ்கிலா
தொக்கசெல்வமுலையுமொருவுதிநீ
புக்குயர்ந்ததெனும்புகழ்போக்கிவே
றுக்கதென்னுமுறுபழிகோடியோ. (௫௫)

தேவர்தேவியர்சேவடிகைதொழும்
தாவின்மூவுலகின்றனிநாயகம்
மேவுகின்றதுநுன்கண்விலக்கினை
யாவரேழையர்நின்னினிலங்கிழாய். (௫௬)

குடிமைமூன்றுலகுஞ்செயுங்கொற்றத்தென்
அடிமைகோடியருளுதியாலென
முடியின்மீதுமுகிழ்த்துயர்கையினன்
படியின்மேல்விழுந்தான்பழிபார்க்கலான். (௫௭)

வேறு.

காய்ந்தனசலாகையன்னவுகாவந்துகதுவாமுன்னம்
தீந்தனசெவிகளுள்ளந்திரிந்ததுசிவந்தசோரி
பாய்ந்தனகண்களொன்றும்பரிந்திலனுயிர்க்கும்பெண்மைக்
கேய்ந்தனவல்லாவெய்யமாற்றங்களினையசொன்னாள். (௩௮)

மல்லடுதிரடோள்வஞ்சன் மனம்பிறிதாகும்வண்ணம்
கல்லொடுந்தொடர்ந்தநெஞ்சகற்பின்மேற்கண்டதுண்டோ
இல்லொடுந்தொடர்ந்தமாதர்க்கேய்வனவல்லவெய்ய
சொல்லிதுதெரியக்கேட்டி துரும்பெனக்கனன்றுசொன்னாள். (௩௯)

மேருவையுருவல்வேண்டின்விண்பிளந்தேகல்வேண்டின்
நீரொழுபுவனம்யாவுமுற்றுவித்திடுதல்வேண்டின்
ஆரியன்பகழிவல்லதறிந்திருந்தறிவிலாதாய்
சீரியவல்லசொல்லித்தலைபத்துஞ்சிந்துவாயோ. (௪௰)

அஞ்சினையாதலானன்றாரியனற்றநோக்கி
வஞ்சனைமானொன்றேவிமாயையான்மறைந்துவந்தாய்
உய்ஞ்சனைபோதியாகின்விதியுன்குலத்துக்கெல்லாம்
நஞ்சினையெழுந்தபோதுநோக்குமேநினதுநாட்டம். (௪௧)

பச்சுளக்கலையுந்தோளும்பலபலபகழிதூவி
வித்தகவில்லினாற்குத்திருவிளையாடற்கேற்ற
சித்திரவிலக்கமாகுமல்லதுசெருவில்லேற்கும்
சத்தியைபோலின்மேனாள்சடாயுவாற்றலாயின்வீழ்ந்தாய். (௪௨)

தோற்றனைபாவைகக்கன்றுநாளுநீர்வெள்ளஞ்சென்னி
ஏற்றவன் ாால்வென்றாயன்றெனினிறத்தியல்றே
நோற்றநோன்புடைபவாழ்நாள்வரமிவைநுனித்தவெல்லாம்
கூற்றினுக்கன்றேவில்லாற்சரத்திற்குங்குறித்ததுண்டோ. (௪௩)

பெற்றுடைவாழுநாளும்பிறந்துடையரனும்பின்னும்
மற்றுடையவையுந்தந்தமலரயன்முதலோர்வார்த்தை
விற்றொழிலுடையிராமன்கோத்துவிடுதலும்விலக்குண்டெல்லாம்
இற்றிடைந்திடுதன்மெய்யேவிளக்கின்முன்னிருளுண்டாமோ (௪௪)

குன்றுநீயெடுத்தநாடன்சேவடிக்கொழுந்தாலுன்னை
வென்றவன்புரங்கள்வேவத்தனிச்சரந்துரந்தமேரு
என்றுணைக்கணையவுற்றத்தானிலாதிற்றுவீழ்ந்த
அன்றெழுந்துயர்ந்தவோசைகேட்டிலைபோலுமம்மா. (௪௫)

வேறு.

மலையெடுத்தெண்டிசைகாக்குமாக்களை
நிலைகெடுத்தேனெனுமாற்றமேநநீ
சிலையெடுத்திளையவனிற்பச்சேர்ந்திலை
தலையெடுத்தின்னமுமகளிற்றாழ்தியோ. (சசு)

ஏழைநின்னெளித்துறையின்னகாமெனை
வாழியங்கோமகனறியவந்தநாள்
ஆழியுமிலங்கையுமழியத்தாழுமோ
ஊழியுந்தீயுமுன்னுயிரொடோயுமோ. (சஎ)

வெஞ்சினவரக்கரைவிளிந்துவீயுமோ
வஞ்சனைநீசெயவள்ளல்சீற்றத்தால்
எஞ்சலினுலகெலாமெஞ்சுமெஞ்சுமென்
றஞ்சுகின்றேனிதற்கறனுஞ்சான்றரோ. (சஅ)

அங்கண்மாஞாலமும்விசும்புமஞ்சவாழ்
வெங்கணாப்புன்றொழில்விலக்கிமேற்கொளாய்
செங்கண்மானான்முகன்சிவனென்றேயெல்லா
எங்கணாயகனையுநினைந்ததேழைநீ. (சகூ)

மாறுபரிவொணமனக்கொண்டாயெனின்
காறுயர்வரைநிகர்காத்தவீரியன்
நாறொருமனிதனாற்றளர்ந்துளானெனில்
தேறுயர்தெரியலான்றன்மைதேர்தியால். (ருய)

இருவரொன்றிகழ்ந்தனையென்னின்யாண்டெல்லை
ஒருவனன்றேயுலகழிக்குமூழியான்
செருவருங்காலையன்மெய்ம்மைதேர்தியால்
பொருவருந்திருவிழந்தநாயம்பெற்றுவாய். (ருக)

பொற்கணான்றம்பியென்றிணையபோர்த்தொழில்
விற்கொணாண்பொருவுதோளவுணர்வேறுளார்
நற்கணாநலலறந்துறந்தநாளினும்
இற்கணாவிறந்திலரிறந்துநீங்கினார். (ருஉ)

வேறு.

பூவிலோனறியாதப்புலன்கள்போனெறியிற்போகாத்
தேவரோவவுணர்தாமோநிலைநின்றுவினையிற்றீர்ந்தார்
ஏவலெவ்வுலகுஞ்செய்பச்செல்வநிற்கிசைந்தவென்றால்
பாவமோமுன்னீசெய்ததருமமோதெரியப்பாராய். (ருங)

இப்பெருஞ்செல்வநின்கணீந்தபேரீசன்யாண்டும்
அப்பெருஞ்செல்வந்துய்ப்பா னின்றுமாதவத்தினன்றே
ஒப்பருந்திருவுநீங்கியுறவொடுமுலக்கவுன்னித்
தப்புறியறத்தைமேயழாய்த்தருமத்தைக்காழியாமே. (௫௪)

மறந்திறம்பாதகோலாவலியினவொணினுமாண்டார்
அறந்திறம்பினருமக்கட்கருடிறம்பினருமன்றே
பிறந்திறந்துழலும்பாசப்பிணக்குடைப்பிணியிற்றீர்ந்தார்
துறந்தரும்பகைகண்மூன்றுந் துடைத்தவர்பிறர்யார்சொல்லாய். ( )

சென்றமிழ்நாதத்தோன்முன்னுடைதுதிர்முனிவர்யாரும்
புன்றொழிலரக்கர்க்காற்றாதோற்கிலம்புகுந்தபோதே
யொன்றருணின்னுலன்னார்குறைவதுசரதங்கோவே
என்றனர்யாமென்கடமேடனியிதற்கியைவசெய்தாய். (௫௬)

உன்னைபங்கேட்டுமற்றுன்னூற்றமுமுடையநாளும்
பின்னையிவ்வரக்கர்சேனைப்பெருமையுமுனிவர்பேணிச்
சொன்னபினுங்கைமூக்குமும்பியர்தோளுந்தாளும்
சின்னபின்னங்கள்செய்ததனைநீசிந்தியாயோ. (௫௭)

ஆயிரங்கடக்கையாணின்னைநான்குகரமும்பற்றி
வாய்வழிக்குருதிசோரக்குத்திவான்சிறையில்வைத்த
தூயவன்வயிரத்தோள்கடுணித்தவன்றொலைந்தமாற்றம்
நீயறிந்திலையோவேதநெறியறிந்திலாதநீசா. (௫௮)

கடிக்குமவல்லரவுங்கேட்குமந்திரங்களிக்கின்றேயை
அடிக்குமீதடாதென்றுன்றமேவதுவோடறிவுகாட்டி
இடிக்குநரில்லையுள்ளாரொண்ணியதெண்ணியுன்னை
முடிக்குநவொன்றபோதுமுடிவதன்றிமுடிவதுண்டோ. (௫௯)

வேறு.

என்றறத்துறைகேட்டலுமிருபதுதபனம்
மின்றிறப்பனவொத்தனவெயில்விடுபகுவாய்
குன்றிறத்தெழித்துரப்பினன்குறிப்பதென்காமன்
தன்றிறத்தையுங்கடந்ததுசீற்றத்தின்றகைமை. (௬௰)

வளர்ந்தநாணினன்மாதிரமனைத்தையுமறைவித்
தளர்ந்த[illegible]ானனல்சொரிகண்ணினனிவனைப்
பிளந்துதி[illegible]ப்பெனென்றுடன்றனன் பெயர்ந்தனன்பெயதான்
கிளர்ந்தசீற்றமுங்காதலு மெதிரெதிர்கிடப்ப. (௬௧)

அன்னகாலையினநுமனுமருந்ததிக்கற்பின்
என்னையாளுடைநாயகன்றேவியையென்முன்
சொன்னநீசன்கைதொடுவதன்முன்றுகைத்தழக்கிப்
பின்னைநின்றதுசெய்குவெனென்பதுபிடித்தான். (௬௨)

தனியினின்றனன்றலைபத்துங்கடிதுகத்தாக்கிப்
பனிபிறங்குவேலையிலிலங்கையைக்கீழுறப்பாய்ச்சிப்
புனிதமாதவத்தணங்கினைச்சுமந்தனன்போவான்
இனிதென்னென்பதுநினைந்தனன்கரம்பிசைந்திருந்தான். (௬௩)

ஆண்டவாளரக்கன்கணன்றண்டத்தையழிப்பான்
மூண்டகாலவெந்தீயெனமுற்றியசீற்றம்
நீண்டகாசனீர்ந்தகத்தின்வீவுறுநிலையின்
மீண்டதின்மொருதன்மையாலிவையிவைவிளம்பும். (௬௪)

வேறு.

கொல்வெனென்றுடன்றேனுன்னைக்கொல்கிலென்குறித்துச்சொன்
சொல்லுளவவற்றுக்கெல்லாங்காரணந்தெரியச்சொல்லின் [ன
ஒல்வதீதொல்லாதீதென்றெனக்குமொன்றுலகத்துண்டோ
மெல்லவதுந்தோற்றறுணும்விளையாட்டின்விளைந்ததமேனுள். (௬௫)

ஒன்றுமேனுணாக்கதிற்சோருயிரெனவுரியோன்றன்னைக்
கொன்றுமாளிழைத்தாணீநின்னுயிர்விடிற்கூற்றங்கூடும்
என்றனுருபிருநீங்குமென்பதையிலையவெண்ணி
அன்றுநான்வஞ்சஞ்செய்ததாமெனக்கமரினேர்வார். (௬௬)

மானென்பதறிந்துபோனமானிடராவார்மீண்டு
யானென்பதறிந்தால்வாரா ரேழைமையெண்ணிநோக்கல்
தேனென்பதறிந்தசொல்லாய்தேவராம்யாவரோவெங்
கோனென்பதறிந்தபின்னைத்திறம்புவார்குறையினல்லால். (௬௭)

வென்றோருமிருப்பயார்க்குமேலவர்விளிவிலாதோர்
என்றோருமிருப்பவன்றேயிந்திரனேவல்செய்ய
ஒன்றுதவுலகமூன்றுமுணர்கின்றவொருவன்யானே
மென்றோளாயிதற்குவேறோர்காரணம்விரிப்பதுண்டோ. (௬௮)

மூவருந்தேவர்தாமுமுரணுகமுற்றுங்கொற்றம்
பாவைநின்பொருட்டினலோர்புழிபெறப்பயன்றீர்தோன்பின்
ஆவியின்மனிதர்தம்மையடுகிலேனவரையீண்டுக்
கூவிநின்றேவல்கொள்வென் காணுதிகுதலைச்சொல்லாய் (௬௯)

சிற்றியற்சிறுமையாற்றல்சிறுதொழின்மறவரோடே
முற்றியசாவில்வீரமுனிவென்கண்விளையாதேனும்
இற்றையிற்பகலினெய்தியிருவரையொருகையாலே
பற்றினென்கொணருந்தன்மைகாணுதிபழிப்பிலாதாய் (௭௰)

பதவியமனிதரேனுமைந்தொடிநின்னைத்தந்த
உதவியையுணரநோக்கினுயிர்கொலைக்குரியரல்லர்
சிதைவுறலவர்க்குவேண்டிற்செய்திறன்றேர்ந்ததெண்ணின்
இதனினுக்கிதேயாகினியற்றுவல்காண்டியின்னும். (௭௧)

பள்ளநீரமேபோத்திநண்ணிப்பாரதனைமுதலினோரான்
உள்ளவர்தம்மையெல்லாமுயிர்குடித்தழித்தியின்
வெள்ளநீர்மிதிலைம்பாரைவேரறுத்தெளிதினெய்திக்
கொள்வெனின்னுயிருமென்னையறிந்திலைகுறைந்தநாளோய். (௭௨)

கூறுரைத்தழன்றுபொங்கி யெரிகதிர்வாளைநோக்கித்
தீறுயிர்க்கிழைத்தநாளுந்திங்களோரிரண்டிற்றேய்ந்த
தாதலிரின்றதெண்ணனறிந்தவாறறிவாயென்றுப்
போதரிக்கண்ணினாளையகத்துவைத்துரப்பிப்போனான், (௭௩)

அஞ்சுவித்தானுமொன்றாலறிவுறத்தேற்றியானும்
வஞ்சியிற்செவ்வியாளைவசித்தென்பாலவருவீரன்றல்
நஞ்சுமக்காவெனென்று நகையிலாமுகத்துப்பேழ்வாய்
வெஞ்சினத்தரக்கிமாரகதம்வேறுறவுணர்த்திப்போனான். (௭௪)

போயினனரக்கன்பின்னைப்பொங்கராநுங்கிக்கான்ற
தூயவெண்மதியையொத்தமாதையைத்தொடர்ந்துசுற்றித்
தீயவல்லரக்கிமார்கடெழீஇத்தெழித்துரப்பிச்சிந்தை
மேயினவண்ணமெல்லாம்விளம்புவருடன்றுமிக்கார். (௭௫)

வேறு

முன்முன்னின்றார்கண்கனல்சிந்தமுடுகுற்றார்
மின்மின்னென்னுஞ்சூலமும்வேலுமிலைவயோச்சிக்
கொன்மின்கொன்மின்கொன்றுகுறைத்துக்குடராரத்
தின்மின்றின்மினென்றுதெழித்தார்சிலரெல்லாம். (௭௬)

வையந்தந்தநான்முகன்மைந்தன்மகன்மைந்தன்
ஐயன்வேதமாயிரம் வல்லோ னறிவாளன்
மெய்ப்பண்பும்பால்வைத்துளதல்லால்வினைவென்றோன்
செய்யும்புன்மையாதுகொலென்றார்சிலரெல்லாம். (௭௭)

மண்ணிற்றீயபடானுயர்தத்தம்வழியோடும்
பெண்ணிற்றீயோய்நின்றூதன்மாயும்பிணிசெய்தாய்
பண்ணிற்கோலிட்டாலனசொல்லிப்பொதுநோக்காக்
எண்ணிக்காணாய்மெய்ம்மையுமென்றார்சிலரெல்லாம். (௭௮)

புக்கவழிக்கும்போந்தவழிக்கும்புனகவெந்தீ
ஒக்கவிளைத்தப்பாயுற்றனையன்றேவுணர்வில்லாய்
இக்கணமிற்றாய்முந்தினமெல்லாமினிவாழாய்
சிக்கவுணாதேசமென்றுதெழித்தார்சிலரெல்லாம். (௭௯)

சொல்லானுற்றோர்பெற்றிமையாதுங்குறையாதாள்
வெல்லானகர்தோன்றின்றுமின்வம்மென்பவர்மெய்யும்
வல்வாய்ப்பெய்போனவனுமெல்லாமனம்வைத்தாள்
நல்லாணல்லகணகள்களுழ்ந்தேதகுகின்றாள். (௮௰)

இம்மோரென்னெய்திய ஞாலத்திடைநின்றாள்
முன்னேசொன்னேனன்றண்டகருவின்முடிவம்மா
பின்னேவாளாபேதுறுவீர்நீர்பிழையென்றாள்
அன்னேநன்றென்றாரவரெல்லாமவிவுற்றார். (௮௧)

அறிந்தாரன்னமூச்சடையென்பாளவள்சொல்லப்
பிறிந்தார்சீற்றமல்லனையன்பிப்பிறிதில்லா
செறிந்தாராயதீவினையன்றார்தெறவெண்ணார்
நெறிந்தாரோரிப்பேதையுமாவிநிலைநின்றாள். (௮௨)

நிந்தனைப்படலம் முற்றிற்று.

ஆக படலம் - ௪ - ௰ - திருவிருத்தம் - ௪௮௩.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௫ வது உருக்காட்டுப்படலம்

காண்டற்கொரீககாலமுமீதேதெறுகாவல்
தாண்டற்கொதககினிந்தையிறைநந்துயில்கில்லார்
மேவ டத்துஞ்சாரொன்றொருருவிக்கைவினைசெய்தான்
மாண்டற்குற்றாரமெனவெல்லாமயர்வுற்றார். (௧)

துஞ்சாதாருந்துஞ்சுதல்கண்டாயோராற்றாள்
நெஞ்சாலொன்றூமுய்வழிகாணுணெருகின்றாள்
அஞ்சாநின்றாள்பன்னெடுநாளுமழிவுற்றாள்
எஞ்சாவன்பாலின்னபகர்ந்தாங்கிடருற்றாள். (௨)

வேறு.

கருமேகநெடுங்கடல்காரனையான்
தருமேதனியேயெனதாருயிர்தான்
உருமேறுறழ்வெஞ்சிலைநாணொலிதான்
வருமேயுனையாய்வலியார்வலியே. (௩)

கல்லாமதியேகதிர்வாணிலவே
செல்லாவிரவேசிறுகாலிருளே
எல்லாமெனையேமுனிவீர்நினையா
வில்லாளனையாதும்விளித்திலிரோ. (௪)

தழல்வீசவுலாய்வருவாடைதழீஇ
அழல்வீரெனதாவியழிந்திலிரோ
நிழல்வீரையனொருடனீர்நெடுநாள்
உழல்வீர்கொடியீருளையாடிலிரோ. (௫)

வாராதொழியானெனுமெண்மையினால்
ஓராயிரகோடியிடர்க்குடைவேன்
ஈராவொருநாள்வலிசேவகனே
நாராயணனேதனிநாயகனே. (௬)

றுவொன்றியகானடைவாய்தவிர்நீ
வருவென்சிலநாளினின்மாநகர்வாய்
இருவென்றனையின்னருடானிறுவேல்
ஒருவென்றனியாவியையுண்ணுதியோ. (௭)

பேணும்புணர்வேயுயிரேபெருநாள்
நாணின்றுழல்வீர்தனிநாயகனைக்
காணுந்துணையுங்கழிவீரலிர்நான்
பூணும்பழியோடுபொருந்துவதோ. (௮)

முடியாமுடிமன்னன்முடிந்திடவும்
படியேழுநெடுந்துயர்பாவிடவும்
வடியாநெறிவந்தவனம்புகுதும்
கொடியார்வருமென்றுகுலாவுவதோ. (௯)

என்றென்றுயிர்விம்மியிருந்தழிவாள்
மின்றுன்னுமருங்குல்விளங்கிழையாள்
ஒன்றென்றுயிருண்டெனினுண்டிடர்யான்
பொன்றும்பொழுதேபுகழ்பூணுமெனா. (௰)

வேறு.

பொறையிருந்தாற்றியென்னுயிரும்போற்றினேன்
அறையிருங்கழலவற்காணுமாசையால்
நிறையிரும்பல்பகனிருதர்நீணகர்
சிறையிருந்தேனையப்புனிதனீண்டுமோ. (௰௧)

உன்னினர்பிறரெனவுணர்ந்துழைந்தவர்
சொன்னனசொன்னனசெவியிற்றூங்கவும்
மன்னுயிர்காத்திருங்காலம்நைகின்றேன்
என்னின்வேறரக்கியர்யாண்டையார்கொலோ. (௰௨)

சொற்பிரியாப்பழிசுமந்துதூங்குவேன்
நற்பிறப்புடைமையுநாணுநன்றரோ
கற்புடைமடந்தையர்கதையுளோர்கடாம்
இற்பிரிந்துய்ந்தவர்யாவராயானலால். (௰௩)

பிறர்மனையெய்தியபெண்ணைப்பேணுதல்
திறனலதென்றுயிர்க்கிறைவன்றீர்ந்தனன்
புறனலரவனுறப்போதுபோக்கியான்
அறனலதியற்றிவேறென்கொண்டாற்றுகேன். (௰௪)

எப்பொழுதிப்பெரும்பழிபினெய்தினேன்
அப்பொழுதேயுயிர்துறக்குமாணையேன்
ஒப்பரும்பெருமறுவுலகமோதயான்
துப்பழிந்துய்வதுதுறக்கந்துன்னவோ. (௰௫)

அன்பழிசிந்தையராயவாடவர்
வன்பழிசுமக்கினுஞ்சுமக்கவாணுயர்
துன்பழிபெரும்புகழ்க்குலத்துட்டோன்றினேன்
என்பழிதுடைப்பவரொன்னின்யாவரோ. (௰௬)

வஞ்சனைமானின்பின்மன்னைப்போக்கியென்
மஞ்சனைவைதுபின்வழிக்கொள்வாயெனு
நஞ்சனையானகம்புகுந்தநங்கையான்
உய்ஞ்சனெனிருத்தலுமுலகங்கொள்ளுமோ. (௰௭)

வல்லியன்மறவர்தம்வடுவிற்றீர்பவர்
வெல்லினும்வெல்பபோர்விளிந்துவீடிக
இல்லியலறத்தையாணிறந்துவாழ்ந்தபின்
சொல்லியவென்பழியவரைச்சுற்றுமோ. (௰௮)

வருந்தலின்மானமாவனையமாட்சியர்
பெருந்தவமடந்தையர்முன்புபேதையேன்
கருந்தனிமுகிலினைப்பிரிந்துகள்வனூர்
இருந்தவளிவளெனவேசநிற்பெனோ. (௰௯)

அற்புதனரக்கர்தம்வருக்கமாசற
விற்பணிகொண்டருஞ்சிறையின்மீட்டநாள்
இற்புகத்தக்கலையென்னின்யானுடைக்
கற்பினையெப்பரிசிழைத்துக்காட்டுகேன். (௨௰)

ஆதலானிறத்தலேயறத்தினாறெனாச்
சாதல்காப்பவருமென்றவத்திற்சாம்பினாள்
ஈதலாதிடமும்வேறில்லையென்றொரு
போதுலாமாதவிப்பொதும்பரெய்தினாள். (௨௧)

கண்டனனநுமனுங்கருத்துமெண்ணினான்
கொண்டனன்றுணுக்கமெய்தீண்டக்கூசுவான்
அண்டர்நாயகனருடூதன்யானெனாத்
தொண்டைவாய்மயிலினைத்தொழுதுதோன்றினான். (௨௨)

அடைந்தனெனடியனேனிராமனாணையால்
குடைந்துலகனைத்தையுநாடுங்கொட்பினால்
மிடைந்தவருலப்பிலர்தவத்தைமேவலால்
மடந்தைநின்சேவடிவந்துநோக்கினேன் (௨௩)

ஈண்டுநீயிருந்ததையிடரின்வைகுறும்
ஆண்டகையறிந்திலனதற்குக்காரணம்
வேண்டுமோவரக்கர்தம்வருக்கம்வேரொடு
மாண்டிலவிதலான்மாறுவேறுண்டோ. (௨௪)

ஐயுறலுளதடையாளமாரியன்
மெய்யுறவுணர்த்தியவுரையும்வேறுள
கையுறுநெல்லியங்கனியிற்காண்டியால்
நெய்யுறுவிளக்கனாய்நினையல்வேறென்றான். (௨௫)

வேறு.

என்றவனிறைஞ்சநோக்கியிரக்கமுமுனிவுமெய்தி
நின்றவனிருதனல்லனெறிநின்றுபொறிகளைந்தும்
வென்றவனல்லனாகின்விண்ணவனாகவேண்டும்
நன்றுணர்வுடையன்றூயனவையிலன்போலுமென்னா (௨௬)

அரக்கனேயாகவேறோரமரனேயாகவன்றிக்
குரக்கினத்தலைவனேதானாகுககொடுமையாக
இரக்கமேயாகவந்திங்கெம்பிரானாமஞ்சொல்லி
உருக்கினனுணர்வைத்தந்தானுயிரிதினுதவியுண்டோ. (௨௭)

எனநினைத்தெய்தநோக்கியிரங்குமெனுள்ளங்கள்ளம்
மனனகத்துடையராயவஞ்சகர்மாற்றமல்லன்
நினைவுடைச்சொற்கள்கண்ணீர்நிலம்புகப்புலம்பாநின்றான்
வினவுதற்குரியனென்னாவீரநீயாவனென்றாள். (௨௮)

ஆயசொற்றலைமேற்கொண்டவங்கையனன்னைநின்னைத்
தூயவன்பிரிந்தபின்புதேடியதுணைவன்றொல்லைக்
காய்கதிர்ச்செல்வன்மைந்தன்கவிக்குலமவற்றுக்கெல்லாம்
நாயகன்சுக்கிரீவனென்றுளனவையிற்றீர்ந்தான். (௨௯)

மற்றவன்முன்னோனந்நாளிராவணன்வலிதன்வாலின்
இற்றுகக்கட்டியெட்டுத்திசையினுமெழுந்துபாய்ந்த
வெற்றியன்றேவர்வேண்டவேலையைவிலங்கன்மத்தில்
சுற்றியநாகந்தேயவமுதெழக்கடைந்ததோளான். (௩௰)

அன்னவன்றன்னையுங்கோனம்பொன்றாலாவிவாங்கிப்
பின்னவற்கரசுநல்கித்துணையெனப்பிடித்தானங்கள்
மன்னவன்றனக்குநாயேன்மந்திரத்துள்ளேன்வானின்
நன்னெடுங்காலின்மைந்தனாமநுமனென்றான். (௩௧)

எழுபதுவெள்ளங்கொண்டவெண்ணனவுலகமெல்லாம்
தழுவிநின்றெறிப்பவேலைதனித்தனிக்கடக்குந்தாள
குழுவினவுங்கோன்செய்யக்குறித்ததுகுறிப்பினுன்னி
வழுவிலசெய்தற்கொத்தவானரம்வானினீண்ட. (௩௨)

துப்புறுபரவையேழுஞ்சூழ்ந்தபாரேழுமாழ்ந்த
ஒப்புறுநாகர்நாடுமும்பரினிம்பர்காறும்
இப்புறந்தேடிநின்னையெதிர்ந்திலவென்னினண்டத்
தப்புறம்போயுந்தேடவவதியினமைந்துபோன. (௩௩)

புன்றொழிலரக்கன்கொண்டுபோந்தநாள்பொதிந்ததூசின்
குன்றினம்மருங்கினிட்டவணிகலக்குறியினாலே
வென்றியானடியன்றன்னைவேறுகொண்டிருந்துகூறித்
தென்றிசைசேறியென்றானவனருள்சிதைவதாமோ. (௩௪)

கொற்றவற்காண்டிக்காட்டிக்கொடுத்தபோதடுத்ததன்மை
பெற்றியினுணர்தற்பாற்றோவுயிர்நிலைபிறிதுமுண்டோ
இற்றைநாளளவுமன்னுவன்றுநீயிழிதநீத்த
மற்றைநல்லணிகள்காணுன்மங்கலங்காத்தமன்னே. (௫௫)

ஆயவன்றன்மைநிற்கவங்கதன்வாலிமைந்தன்
ஏயவன்றென்பால்வெள்ளமிரண்டினோடெழுந்துசேனை
மேயினபடர்ந்துதீரவனையவன்விடுத்தானென்னைப்
பாய்புனலிலங்கைமூதூர்க்கென்றனன்பழியையென்றான். (௫௬)

எய்தவனுரைத்தலோடுமெழுந்துபேருவகையேற
வெய்துறலொடுங்குமேனிவானுறவிம்மியோங்கி
உய்தலவற்றுற்றதோவென்றருவிநீரொழுகுகண்ணாள்
ஐயசொலையன்மேனியெப்படியறிதியென்றாள். (௫௭)

படியெடுத்துரைத்துக்காட்டும்படித்தன்றுபடிவம்பண்பின்
முடிவுளவுவமமெல்லாமிலக்கணமொழியுமுன்னர்த்
துடியிடையடையாளத்தின்றொடரவைதொடர்தியென்று
அடிமுதன்முடியின்காறுமறிவுறவனுமன்சொல்வான். (௫௮)

வேறு.

சேயிதழ்த்தாமரையென்றுசேணுளோர்
ஏயினரதன்றுணையெளியதில்லையால்
நாயகன்றிருவடிகுறித்துநாட்டுறின்
பாய்திரைப்பவளமுங்குவளைப்பண்பினும். (௫௯)

தளங்கெழுகற்பகமுகிழுந்தண்பிறை
இளங்கொடிப்பவளமுங்கிடக்கவென்னவை
துளங்கொளிவிரற்கெதிருதிக்குஞ்சூரியன்
இளங்கதிரொக்கினுமொக்குமேந்திழாய். (௬௰)

சிறியவும்பெரியவுமாகித்திங்களோ
மறுவிலபத்துளவல்லமற்றினி
எறிசுடர்வயிரமோதிரட்சியெய்தில
அறிகிலெனுகிர்க்கியானுவமமாவன. (௬௧)

பொருந்திலநிலவொடுபோந்துகானிடை
வருந்தினவெனினதுநூலைமாறுகொண்
டிருந்ததுநின்றதுபுவனம்பாலவையும்
ஒருங்குடன்புணர்வஃதுரைக்கற்பாலதோ. (௬௨)

தாங்கணைப்பணிலமும்வளையுந்தாங்கா
வீங்கணைப்பள்ளியானெனினும்வேறினிப்
பூங்கணைக்காற்கொருபரிசுதான்பொரும்
ஆங்கணைக்காவமோவாவதன்னமே. (௪௩)

அறங்கிளர்பறவையினரசனூடெழிற்
பிறங்கெருத்தனையனபெயரும்பெற்றுடை
மறங்கிளர்மதகரிக்கரமுதானின
குறங்கினுக்குவமையிவ்வுலகிற்கூடுமோ. (௪௪)

வலஞ்சுழித்தொழுகுநீர்வழங்குகங்கையின்
பொலஞ்சுழியென்றலும்புன்மைபூவொடு
நிலஞ்சுழித்தெழுமணியுந்திநேரினி
இலஞ்சியம்போலும்வேறுவமையாண்டரோ (௪௫)

பொருவருமரகதப்பொலன்கொண்மால்வரை
வெருவுறவிரிந்துயர்விலங்கலாகத்தைப்
பிரிவறநோற்றிலளென்னிற்பின்னையத்
திருவினிற்றிருவுளார்யாவர்தெய்வமே. (௪௬)

நீடுறுகிட்டிகைநின்றயானையின்
கோடுறுகரமெனச்சிறிதுகூறலாம்
தோடுறுமலரெனச்சுரும்புசுற்றறுத்
தாடொடுதடக்கைவேறுவமைசாலுமே. (௪௭)

பச்சிலைத்தாமரைபகல்கண்டாலெனக்
கைச்செறிமுகிழுகிர்கனகனென்பவன்
வச்சிரயாக்கையைவகிர்ந்தவன்றொழில்
நிச்சயமன்றெனினையநீங்குமோ. (௪௮)

திரண்டிலவொளியிலதிருவின்சேர்வில
முரண்டருமேருவின்முரியமூரிநாண
புரண்டிலபுகழிலபொருப்பென்றொன்றுபொன்
திரண்டிலபுயங்களுக்குவமமேற்குமோ. (௪௯)

கடற்படுபணிலமுங்கன்னிப்பூகமும்
மிடற்றினுக்குவமையென்றுரைக்குமெல்லியோர்
உடற்படவொன்னுமோவுரகப்பள்ளியான்
இடத்துறைசங்கமொன்றிருக்கவெங்களால். (௫௰)

கண்டுபோயினைநீநெறிகாட்டிட
மண்டுபோரினரக்கனைமாய்த்தெனைக்
கொண்டுமன்னவன்போமெனுங்கொள்கையைத்
தண்டினாயெனக்காருயிர்தந்தநீ. (௫௫)

ஏயப்பன்னினளின்னனதன்னுயிர்
தேயக்கன்றுபிடியுறத்தீங்குறு
தாயைப்போலத்தளர்ந்துமயர்ந்தனள்
தீயைச்சுட்டதொர்கற்பெனுந்தீயினாள். (௫௬)

பெருந்தகைப்பெரியோனைப்பிணித்தபோர்
முருந்தன்மற்றையுலகொருமூன்றையும்
அருந்தவப்பயனாலரசாள்கின்றான்
இருந்தவப்பெருங்கோயில்சென்றெய்தினான். (௫௭)

வேறு.

நலங்கண்மூன்றிற்கும்பிறிதொருமதிதழைத்தென்ன
அலங்கல்வெண்குடைதண்ணிழலவிரொளிபரப்ப
வலங்கொடோளினான்மண்ணின்றுவானுறவெடுத்த
பொலங்கொண்மாமணிவெள்ளியங்குன்றெனப்பொலிய (௫௮)

புள்ளுயர்த்தவன்றிகிரியும்புரந்தரனயிலும்
தள்ளின்முக்கணான்கணிச்சியிற்றாக்கியதழும்பும்
கள்ளுயிர்க்குமென்குழலியர்முகிழ்விரற்கதிர்வாள்
வள்ளுகிர்ப்பெருங்குறிகளும்புயங்களின்வயங்க. (௫௯)

துன்றுசெம்மயிர்ச்சுடர்நெடுங்கற்றைகள்சுற்றி
நின்றுதிக்குறநிரல்படக்கதிர்க்குழாநிமிர
ஒன்றுசீற்றத்தினுயிர்ப்பெனும்பெரும்புகையுயிர்ப்பத்
தென்றிசைக்குமோர்வடவன்றிருத்தியதென்ன (௬௰

மரகதக்கொழுங்கதிரொடுமாணிக்கநெடுவாள்
நரகதேயத்துணடுக்குறுவிருளையுநக்கச்
சிரமணைத்தையுந்திசைதொறுந்திசைதொறுஞ்செலுத்தி
உரகர்கோனினிதரசுவீற்றிருந்தனனொப்ப (௬௧)

குவித்தபன்மணிக்குப்பைகள்கலையொடுங்கொழிப்பச்
சவிச்சுடர்க்கலனணிந்தபொற்றோளொடுதயங்கப்
புவித்தடம்படர்மேருவைப்பொன்முடியென்னக்
கவித்துமாலிருங்கருங்கடலிருந்ததுகடுப்ப (௬௨)

சிந்துராகத்தின்செறிதுகிற்கச்சொடுசெறியப்
பந்திவெண்முத்தினணிகலன்முழுநிலாப்பரப்ப
இந்துவெண்குடைநீழலிற்றாரகையினம்பூண்
டந்திவானுமித்தலனுவீற்றிருந்ததாமென்ன (௪௩)

வண்மைக்குந்திருமறைகட்கும்வானினும்பெரிய
திண்மைதகுந்தனியுறையுளாமுழுமுகத்திசையின்
கண்ணைக்குந்தொறுங்களிற்றொடுமாதிரங்காக்கும்
எண்மர்க்குமற்றையிருவர்க்கும்பெருப்பயமியற்ற (௪௪)

ஏகநாயகன்றேவியையெதிர்ந்ததற்பின்னை
நாகர்வாழ்விடமுதலெனநான்முகன்வைகும்
மாகமாலவிசும்பீறெனநடுவணவனைப்பில்
தோகைமாதர்கணமைந்தரிற்றோன்றினர்சுற்ற (௪௫)

வானரங்களும்வானவரிருவருமனிதர்
ஆனபுன்றொழிலோரெனவிகழ்கின்றவவரும்
ஏனநின்றவரிருடியர்சிலவொழிந்தியாரும்
தானவின்றவேலரக்கர்தங்குழுவொடுசுற்ற. (௪௬)

நரம்புகண்ணகத்துளுறைநறைநிறைபாண்டில்
நிரம்புசில்லரிப்பாணிபுங்குறடுநின்றிசைப்ப
அரம்பைமங்கையரமிழ்துகுத்தாலன்னபாடல்
வரம்பிலின்னிசைசெவிதொறுஞ்செவிதொறும்வழங்க. (௪௭)

கூடுபாணியினிசையொடுமுழவொடுங்கூடத்
தோடுசேறடிவிழிமனங்கையொடுதொடரும்
ஆடறோகைகுறினருந்தவமுனிவர்க்குமமைந்த
வீடுமீட்டதறுமேனகைமேனகைவிளங்க. (௪௮)

ஊடினார்முகத்துறுநகையொருமுகமுண்ணக்
கூடினார்முகக்களிநகையொருமுகங்குடிப்பப்
பாடினார்முகத்தாரமுமொருமுகம்பருக
ஆடினார்முகத்தணிபமுமொருமுகமருந்த, (௪௯)

தேவரோடிருந்தரசியலொருமுகஞ்செலுத்த
மூவரோடுமாமந்திரமொருமுகமுயலப்
பாவகாரிதன்பாவகமொருமுகம்பயிலப்
பூவைசானகியுருவொடுமொருமுகம்பொருந்த. (௫௰)

காந்தண்மெல்விரற் சனகிதன்கற்பெனுங்கடலை
நீந்திமீயுறுவதெங்ஙனென்றொருநமுறைநினையச்
சாந்தளாவியகொங்கைநன்மகளிர்தற்சூழ்ந்தார்
ஏந்துமாடியினொருமுகமியல்புடனிலங்க, (௫௧)

பொதும்பர்வைகுதேன்புக்கருந்துதற்ககம்புலரும்
மதம்பெய்வண்டெனச்சனகிமேன்மனஞ்செலமறுகி
வெதும்புவாரகம்வெந்தழியார்நகில்விழிநீர்
ததும்புவார்விழித்தாணாவேறொடொறுந்தாக்க. (௫௨)

மாறளாவியமகரந்தநறவுண்டுமகளிர்
வீறளாவியமுகுண்முலைமெழுகியசாந்தின்
சேறளாவியசிறுநறுஞ்சீகரத்தென்றல்
ஊறளாவியகம்பெனவுடலிடைநுழைய, (௫௩)

திங்கள்வாளுநன்மடந்தையர்சேயரிக்கிடந்த
அங்கபத்தடந்தாமரைக்கலரியோனாகி
வெங்கண்வானவர்தானவரொன்றிவர்விரியாப்
பொங்குகைக்கடற்றாமரைக்கிந்துவேபோன்று. (௫௪)

இருந்தவெண்டிசைக்கிழவனைமாருதியெதிர்ந்தான்
கருந்திறகத்தைநோக்கியகலுழனிற்கனன்றான்
திருந்துந்தாளிடைவீக்கியபாசத்தைச்சிந்தி
உருந்துநஞ்சுபோல்பவன்வயிற்பாய்வெனென்றுடன்றான். (௫௫)

உறங்குகின்றபோதுயிருண்டல்குற்றமென்றொழிந்தேன்
பிறங்குபொன்மணிபாசனத்திருக்கவும்பெற்றேன்
திறங்களென்பலசிந்திப்பதிவன்றலைசிதறி
அறங்கொள்சொம்பினைநீட்டெனநல்வெனென்றமைந்தான், (௫௬)

தேவர்தானவர்முதலினர்சேவகன்றேவி
காவல்காண்டிவணிருந்தவர்கட்புலன்கதுவப்
பாவகாரிதன்முடித்தலைபறித்திலெனென்றால்
ஏவதியானினிமேற்செயுமாள்வினையென்றான். (௫௭)

மாடிருந்தமடற்றிலன்புணர்மங்கையர்மயங்கி
[illegible]டரிந்திடமுடித்தலைதிசைதொறுமுருட்டி
ஆடல்கொண்டிறின்றார்க்கின்றததுகொடிதம்மா
தேடிவந்ததோர்குரங்கெனும்வாசகஞ்சிறிதோ (௫௮)

நீண்டவாளெயிற்றரக்கனைக்கண்களினேரோ
காண்டல்வேண்டியிவ்வுயிர்சுமந்தெதிர்சிலகழறி
மீண்டபோதுண்டுவசைப்பொருள்வென்றிலேனெனினும்
மாண்டபோதினும்புகழன்றிமற்றுமொன்றுண்டோ. (௫௯)

என்றுதோளிடையிறுக்கியபாசமிற்றேகக்
குன்றின்மேலெழுகோளரியேறெனக்குதியின்
சென்றுகூடுவலென்பதுசிந்தனைசெய்யா
நின்றுகாரியமன்றெனநீதியினைந்தான். (௬௰)

வேறு.

கொல்லலாம்வலத்தனுமல்லன்கொற்றமும்
வெல்லலாந்தரத்தனுமல்லன்மேலைநாள்
அல்லெலாந்திரண்டனநிறத்தனூற்றலை
வெல்லலாமிராமனாற்பிறரும்வெல்வரோ. (௬௧)

என்னையும்வெலற்கரிதிவனுக்கீண்டிவன்
தன்னையும்வெலற்கரிதெனக்குந்தாக்கினால்
அன்னவேகாலங்கள்கழியுமாதலான்
துன்னருஞ்செருத்தொழிற்றொடங்கலாயதோ. (௬௨)

ஏழுயருலகங்கள்யாவுமின்புறப்
பாழிவன்புயங்களோடரக்கன்பஃறலைப்
பூழியிற்புரட்டலென்பூணிப்பாமென
ஊழியான்விளப்பியவுரையுமொன்றுண்டால். (௬௩)

இங்கொருதிங்களேயிருப்பல்யானென
அந்தணாயகன்றனதாணைகூறிய
மங்கையுமின்னுயிர்துறத்தல்வாய்மையால்
பொங்குவெஞ்செருவிடைப்பொழுதுபோக்கினால். ()

ஆதலானமர்த்தொழிலழகிற்றன்றருந்
தூதனுந்தன்மையேதூய்தென்றுன்னினான்
வேதநாயகன்றனித்துணைவன்வென்றிசால்
ஏதில்வாளரக்கனதிருக்கையெய்தினான். (௬௫)

தீட்டியவாளெனத்தெறுகட்டேவியர்
கூட்டியகுழுவிடையிருந்தவேந்தற்குக்
காட்டினனுமனைக்கடலிராமு
தூட்டியவும்பளாயுலையவோட்டினான். (௬௬)

புவனமெத்தனையவையனைத்தும்போர்கடந்
தவனையுற்றரியுருவானவாண்டகை
சிவனெனச்செங்கணனென்னச்சேவகன்
இவனெனக்கூறிநின்றிருகைகூப்பினான். (சுஎ)

நோக்கியகட்பொறிநுவன்றவாய்களில்
தூக்கியபொறியொடுமயிர்சுறுக்கொளத்
தாக்கியுவுயிர்ப்பொடுந்தவழவெம்புகை
வீக்கினனவ்வுடல்விசித்தயாம்பினே. (சுஅ)

அன்னவோர்வெகுளியனமரராதியர்
துன்னியதுன்னலர்த்துணுக்கஞ்சுற்றுற
என்னிவண்வரவுநீயாரையென்றவன்
தன்மையைவினயினான்கூற்றின்றன்மையான் (சுகூ)

நேமியோகுலிசியோநெடுங்கணிச்சியோ
தாமரைக்கிழவனோதறுகட்பஃறலைப்
பூமிதாங்கொருவனோபொருதுமுற்றுற
நாமமுமுருவமுங்கரந்துநண்ணினாய். (எ0)

நின்றிசைத்துயிர்கவர்நீலக்காலனோ
குன்றிசைத்தயிலுறவெறிந்தகொற்றனோ
தென்றிசைக்கிழவனோதிசைநின்றாட்சியர்
என்றிசைக்கின்றவர் யாருள்யாவனீ (எக)

அந்தணர்வேள்வியினாக்கியானையின்
வந்துறவிடுத்ததோர்வயவெம்பூதமோ
முந்தொருமலருளோனிலங்கைமுற்றுறச்
சிந்தெனத்திருத்தியதறுகட்டெய்வமோ (எஉ)

ஆரைநீயென்னையிங்கெய்துகாரணம்
ஆருனைவிடுத்தவரறியவாணையால்
சோர்விலைசொல்லுதியென்னச்சொல்லினான்
வேரொடுமமரர்தம்புகழ்விழுங்கினான் (எ௩)

சொல்லியவனைவருமல்லலன்சொன்னவப்
புல்லியவலியினோவல்பூண்டிலென்
அல்லியங்கமலமேயனையசெங்கணோர்
வில்லிதன்றூதன்யானிலங்கைமேயினேன் (எ௪)

அனையவன்யாரெனவறிதியாரியேல்
முனைவருமமரருமூவர்தேவரும்
எனையவரெனையவர்யாவர்யாவையும்
நினைவருமிருவினைமுடிக்கநின்றுளான் (௭௫)

வேறு.

ஈட்டியவலியும்வென்றிபற்றியதவமும்யாணர்
கூட்டியபடையுந்தேவர்கொடுத்தநல்வரமுங்கோட்பும்
தீட்டியபிறவுஞ்செய்ததிருத்தியவாழ்வுமெல்லாம்
நீட்டியபகழியொன்றான்முதலொடுநீக்கநின்றான் (௭௬)

தேவரும்பிறருமல்லன்றிசைக்களிறல்லன்றிக்கிற்
காவலரல்லனீசன்கைலையங்கிரியுமல்லன்
மூவருமல்லன்மற்றைமுனிவருமல்லனெல்லைப்
பூவலயத்தையாண்டபுரவலன்புதல்வன்போலாம். (௭௭)

போதமும்பொருடருங்கல்விப்புரையறுபயனும்பொய்தீர்
மாதவஞ்சாந்ததீராவரங்களுமற்றுமுற்றும்
யாதவனினைந்தானன்னபயத்தனவேதுவேண்டின்
வேதமுமறனுஞ்சொல்லுமெய்யறமூர்த்தியல்லோ. (௭௮)

காரணங்கோடியாயிற்கடையிலாமறையின்கண்ணும்
ஏரணையவாட்டமாட்டாவறிவினுக்கறிவுமன்னோன்
பேரணங்கிடங்கரியவ்வைப்பொருதின்றமுதலேயயற
யாரணங்காகவந்தனமரரைக்காக்கவந்தான். (௭௯)

மூலமுநடுவுமீறுமில்லதோர்மும்மைத்தாய
காலமுங்கணக்குநீத்தகாரணன்கைவில்லேந்திச்
சூலமுந்திகிரிசங்குங்கரகமுந்துறந்துதொல்லை
ஆலமுமலரும்வெள்ளிப்பொருப்பும்விட்டயோத்திவந்தான். (௮௰)

அறந்தலைநிறுத்திவேதமருள்சுரந்தறைந்தநீதித்
திறந்தெரிந்துலகம்பூணச்செந்நெறிசெலுத்தித்தீயோர்
இறந்துகநூறித்தக்கோரிடர்துடைத்தேகவிண்டு
பிறந்தனன்றன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுப்பான். (௮௧)

அன்னவற்கடிமைசெய்வேனாமமுமநுமனென்பேன்
நன்னுதறன்னைத்தேடநாற்பெருந்திசையும்போந்த
மன்னரிற்றென்பால்வந்ததானைக்குமன்னன்வாலி
தன்மகனவன்றன்றூதன்வந்தனெனறனியேனென்றான். (௮௨)

என்றனுமிலங்கைவேந்தனெயிற்றினமெழிலிநாப்பண்
மின்றிரிந்தன்னதக்குவாலிசெய்விடுத்ததூத
வன்றிறலாயவாலிவலியன்கொலரசின்வாழ்க்கை
நன்றுகொலென்னலோடுநாயகன்றூதனக்கான். (௮௩)

அஞ்சலையரக்கபார்விட்டந்தரமடைந்தானன்றே
வெஞ்சினவாலிமீளான்வாலும்போய்விளிந்ததன்றே
அஞ்சனமேனியான்றனடிகளையொன்றான்மாழ்கித்
துஞ்சினனெங்கள்வேந்தன்சூரியன்றோன்றலென்றான். (௮௪)

என்னுடைமீட்டிலவ்வாலியையெறுழ்வாயப்பால்
இன்னுயிருண்டதிப்போதியாண்டையாகிராமனென்பான்
அன்னவன்றேவிதன்னையங்கதனுடனுற்ற
தன்மையையுரைசெய்கென்னச்சமீரணன்றனயன்சொல்வான். (௮௫)

தேவியைநாடிவந்தசெங்கணற்றெங்கள்கோமான்
ஆவியொன்றாகநட்டானருந்துயர்துடைத்தியென்ன
ஓவியர்க்கெழுதவொண்ணாவுருவதனுருமையோடும்
கோவியற்செல்வமுன்னைகொடுத்துவாலியையுங்கொன்றான். (௮௬)

ஆயவன்றன்னொடாண்டோர்திங்களோர்நான்கும்வைகி
மேயவெஞ்சேனைசூழ்வீற்றினிதிருந்தவீரன்
போயினிர்நாடுமென்னப்போந்தனம்புகுந்ததீதென்
றேயவன்றூதன்சொன்னானிராவணனிதனைச்சொன்னான். (௮௭)

உங்குலத்தலைவன்றன்னோடொட்பிலாவுயர்ச்சியோனை
வெங்கொலையம்பிற்கொன்றாற்காட்டொழின்மேற்கொண்டோரோல்
எங்குலப்புறனுஞ்சீர்த்திநும்மொடுமியைந்ததென்றால்
மங்குலிற்பொலிந்தஞாலமாதுலையுடைத்துமாதோ. (௮௮)

தம்முனைக்கொல்வித்தன்னாற்றொன்றவற்கன்புசான்ற
உம்மினத்தலைவனேவயாதெனக்குணர்த்தலுற்ற
தெம்முனைத்தாதுவந்தாயிகல்புரிதன்மையல்லை
தம்பினைக்கொல்லாநெஞ்சமஞ்சலைநுவறியென்றான். (௮௯)

வேறு.

துணர்த்ததாரவன்சொல்லியசொற்களைப்
புணர்த்துநோக்கிப்பொதுநின்றநீதியை
உணர்த்திலைதுறுமெனவுன்னருங்
குணத்தினனுமினையனகூறினான். (௯௰)

தூதுவந்ததுசூரியன்றான்முனே
ஏதுவொன்றியநீதியினைந்தன
சாதுவென்றுணர்கிற்றியேற்றக்கன
கோதிறந்தனநின்வயிற்கூறுவாம். (௯௧)

வறிதுவீழ்த்தனைவாழ்க்கையையமன்னறம்
சிறிதுநோக்கலைதீமைதிருத்தினாய்
இறுதியுற்றுளதாயினுமின்னுமோர்
உறுதிகேட்டியுயிர்நெடிதோம்புவாய். (௯௨)

போயிற்றீர்நும்புலன்வென்றுபோற்றிய
ஆயிற்றீர்வரிதாகியமாதவம்
மாயிற்றீர்வருங்கேடருங்கற்பினாள்
தீயிற்றூயவளைத்துயர்செய்ததால். (௯௩)

இன்றுவீந்ததுநாளைச்சிறிதினற
நின்றுவீந்ததலாநிறைநிற்குமோ
ஒன்றுவீந்ததுநல்லுணரும்பரா
வென்றுவீங்கியவீககமிகுத்ததால். (௯௪)

தீமைநன்மையைத்தீர்த்தலொல்லாதெனும்
வாய்மைநீக்கினைமாதவத்தால்வந்த
தூய்மைதூயவடன்மையிற்றோன்றிய
நோய்மையாற்றுடைக்கின்றனைநோக்கலாய். (௯௫)

திறந்திறம்பியகாமச்செருக்கினால்
மறந்துகத்தமதியின்மயங்கினார்
இறந்திறந்திழிந்தேறுவதேயலால்
அறந்திறம்பினராருளராயினார். (௯௬)

நாமத்தாழ்கடன்ஞாலத்தவிந்தவர்
ஈமத்தான்மறைந்தாரிளமாதர்பால்
காமத்தாலிறந்தார்களிவண்பிறை
நாமத்தாரினமொண்ணினுஞ்சால்வரோ. (௯௭)

பொருளுங்காமமுமென்றிவைபோக்கிவே
திருளுண்டாமெனவெண்ணலிதலும்
அருளுங்காதலிற்றீர்தலுமலலதோர்
தெருளுண்டாமெனவெண்ணலர்சீரியோர். (௯௮)

இச்சைத்தன்மையினிற்பிறரில்வினை
நச்சினாளுநகையுறநாணிலன்
பச்சைமேனிபுலர்ந்துபழிபடூஉம்
கொச்சையாண்மையுஞ்சீர்மையிற்கூடுமோ. (௯௯)

ஓதநீர்நலகாண்டவருன்றுணைப்
போகநீங்கியராருளர்போயினார்
வேதநீதிவிதிவழிச்செல்வரும்
காதனீயறத்தெல்லைகடத்தியோ. (௱)

வெறுப்புண்டாயவொருத்தியைவேண்டினால்
மறுப்புண்டாயபின்வாழ்கின்றவாழ்வினின்
உறுப்புண்டாய்நடுவோங்கியநாசியை
அறுப்புண்டாலதழகெனலாகுமே. (௱௧)

பாரைஞ்ஞூறுவபற்பலபொற்புயம்
ஈரைஞ்ஞூறுதலையுளவென்னினும்
ஊரைஞ்ஞூறுங்கடுங்கணலுட்பொதி
சீரைஞ்ஞூறவைசேமஞ்செலுத்துமோ. (௱௨)

புரம்பிழைப்பருந்தீப்புகப்பொங்கியோன்
நரம்பிழைத்தனபாடலினல்கிய
வரம்பிழைக்குமறைபிழையாதவன்
சரம்பிழைக்குமென்றெண்ணுதல்சாலுமோ. (௱௩)

ஈறினாணுகவெஞ்சலினற்றிரு
நூறிநொய்தினையாகிறுழைதியோ
வேறுமின்னுநகையாம்வினைத்தொழில்
தேறினார்பலர்காமிக்குஞ்செவ்வியோய். (௱௪)

பிறந்துளார்பிறவாதபெரும்பதம்
சிறந்துளார்மற்றுந்தேவர்க்குந்தேவராய்
இறந்துளார்பிறர்யாருமிராமனை
மறந்துளாருளராகிலர்வாய்மையால். (௱௫)

ஆதலாற்றனரும்பெறற்செல்வமும்
ஓதுபல்கிளையும்முயிரும்பெறச்
சீதையைத்தருகென்றெனச்செப்பினான்
சோதியான்மகனிற்கெனச்சொல்லினான். (௱௬)

என்றலும்மிவைசொல்லியதெற்கொரு
குன்றின்வாழுங்குரங்குகொலாமிது
நன்றுநன்றெனமாநகைசெய்தனன்
வென்றியென்றொன்றுதானன்றிவேறிலான். (௱௭)

குரக்குவார்த்தையுமானிடர்கொற்றமும்
இருக்கநிற்கநீயென்சொலடாவிரும்
புரத்தினுட்டருந்தூதுபுகுந்தபின்
அரக்கனைக்கொன்றதந்துணையாமெயன்றான், (௱௮)

காட்டுவாரின்மையாற்கடிகாவினை
வாட்டினேனென்னைக்கொல்லவந்தார்களை
வீட்டினேன்பின்னுமென்மையினாலுன்றன்
மாட்டுவந்ததுகாணுமதியினால். (௱௯)

என்னுமாத்திரத்தின்கடெரிநீண்டுக
மின்னும்வாளெயிற்றன்சினம்வீங்கினான்
கொன்மினென்றனன்சொல்லியர்சேர்தலும்
நின்மினென்றனன்வீடணனீதியான். (௱௰)

ஆண்டெழுந்துநின்றண்ணலரக்கனை
நீண்டகையின்வணங்கினனீதியான்
மூண்டகோபமுறையதன்றுமென
வேண்டுமெய்யுரைபையவிளம்பினான். (௱௰௧)

வேறு.

அந்தணனுலகமூன்றுமாதியினறத்தினாற்றல்
தந்தவனன்புக்கான்றதவநெறியுணர்ந்ததக்கோய்
இந்திரன்கருமமாற்றுமிறைவனீயியம்புதூது
வந்தனெனென்றபின்புஞ்சொல்லியோமறைகள்வல்லோய். (௱௰௨)

பூதலப்பரப்பினண்டப்பொகுட்டினுட்புறத்துட்பொய்தீர்
வேதமுற்றியங்குவைப்பின்வேறுவேறிடத்தும்வந்தார்
மாதரைக்கொலைசெய்தார்களுளரெனவரினும்வந்த
தூதரைக்கொன்றுளார்கள்யாவரோதொல்லைநல்லோர். (௱௰௩)

பகைப்புலனணுகியுய்த்தார்பகர்ந்ததுபகர்ந்துபற்றார்
மிகைப்புலனடக்கிமெய்ம்மைவிளம்புதல்விரதம்பூண்ட
தகைப்புலக்கருமத்தோரைக்கோறலிற்றக்கார்யார்க்கும்
நகைப்புலன்பிறிதுண்டாமேநங்குலநவையுண்டாமே. (௱௰௪)

முத்தலையெங்கன்மற்றைமுராந்தகன்முனிவன்முன்னு
அத்தலைநம்மைநோவமரர்க்குநகையிற்றுமால்
எத்தலையுலகங்காக்குமேவேந்தநீவேற்றோவ
இத்தலையெய்தினானைக்கொல்லுதலிழுக்கமின்னும். (௱௪௫)

இளையவடன்னைக்கொல்லாதிருசெவிமூக்கொடீர்ந்து
விளைவுணாவென்றுவிட்டார்வீரராய்மெய்ம்மையோர்வார்
களைதிலையலாவிநம்பாலிவன்வந்துகண்ணிற்கண்ட
உளவுணாயாமற்செய்தியாதியென்றமையச்சொன்னான். (௱௪௬)

வேறு

நல்லதுணைத்தாய்நம்பியிவனவைசெய்தானேயானும்
கொல்லல்பழுதேபோயிடைநீகூறிக்கொணர்கிடதென்னத்
தொல்லைநலைமூலமறச்சுட்டுநகராச்சூழ்போக்கி
எல்லைநடக்கவிடுமின்களென்றானின்றாரெழுந்தார். (௱௪௭)

ஆயகாலத்தயன்படையோடிருப்பவாசாதனவிடுதல்
தாய்பாசமெனப்பலவுங்கொணர்ந்துபிணியின்றேளென்னு
மேயதெய்வப்படைக்கலத்தைவிட்டானமரர்போர்வென்றான்
ஏயனுமுன்னிடைபுக்குத்தொடைவன்கயிற்றாற்பிணித்திறுத்தார். ()

நாட்டினகரினடுவுள்ளகயிறுநவிலுந்தகைமையவே
வீட்டினாசனெனும்பாசமற்றதேரும்விசிதுறந்த
மாட்டும்புரவியாயவெலாமருவிவாங்குந்தொடையழிந்த
பூட்டும்வல்லின்முட்கோடும்புரசையிழந்தபோர்யானை. (௱௪௯)

மண்ணிற்கண்டவானவனாவலியிற்கவர்ந்தவரம்பெற்ற
எண்ணற்கரியமேவனயனாயிகலிற்பறித்ததமக்கியைந்த
பெண்ணிற்கிசையுமங்கலத்திற்பிணித்தகயிறேயிடையிழைத்த
கண்ணிற்கண்டவன்பாசமெல்லாமிட்டுக்கட்டினார். (௱௨௰)

கடவுட்படையைக்கடந்தறத்தினணைகடந்தேனுகாமே
விடுவித்தளிதகார்தெவ்வரோவென்றேனன்றோவிவர்வென்றி
சுடுவிக்கின்றகிவ்வூனைச்சுடுகென்றுலாத்ததுணிவென்று
நடுவுற்றனையப்புறம்நாக்கிமுற்றுமுவந்தானவையற்றான். (௱௨௧)

நொய்யபாசம்புறம்பிணிப்பநோன்மையிலன்போலுடனுணங்கி
வெய்யவரக்கர்புறத்தலைப்பவீழ்முணர்ந்தேவிரைவில்லா
ஐயன்விஞ்சைதனையறிந்துமறியாதான்போலவிஞ்சையெனும்
பொய்யைமெய்போனடிக்கின்றமேயாகிபோன்றான்போகின்றான். ()

வேந்தன்கோயில்வாயிலொடுவிளைவிற்கடந்துவெள்ளிடையின்
போந்துபுறநின்றிளைக்கின்றபொறைதீர்மறவர்புறஞ்சுற்ற
ஏந்துநெடுவால்கிழிசுற்றிமுற்றுந்தோய்த்தாரிழுதெண்ணெய்
காந்துகடுந்தீக்கொளுத்தினரார்த்தாரண்டங்கடியலங்க. (௩௨௩)

ஒக்கவொக்கவுடல்விசித்தவுலப்பிலாதவுரப்பாசம்
பக்கப்பக்கமிருகூறாய்நூறாயிரவர்பற்றினர்
புக்கபடைஞர்புடைகாப்பப்போதுபுணரிகணக்கர்பறைசாற்றவோர்
திக்கினளவாயனின்றுகாண்போயகெலலைதெரிவரிதாய. (௩௨௪)

அந்தநகருங்கடிகாவுமழிவித்தக்கன்முதலாயோர்
இந்தநூறிச்சீதையொடும்பேசிமனிதர்சிறந்செப்ப
வந்தகுரங்கிற்குற்றதனைவப் பின்காணவம்பென்று
நந்தந்தெருவும்வாயிற்றுறும்யாருமறியச்சாற்றினர். (௩௨௫)

ஆர்ந்தாரண்டத்கப்புறத்துமறிவிப்பார்போலங்கோடிங்
கோர்ந்தார்முரசமெற்றினரிடிந்தார்தெழிதகாரொம்மருங்கும்
பார்த்தாமோடிச்சானகிக்கும்பகர்ந்தாரவளுமுயிராபதைத்தாள்
வேர்த்தாளுலந்தாள்விம்மினள்விழுந்தாளழுதாள்வெய்துயிர்த்தாள்

தாயேயனையகருணையான்றுணையேயேதுந்தகைவில்லா
நாயேயனையவல்லரக்கர்நலியக்கண்டாலனகாயோ
நீயேயுலகுக்கொருசான்றுநிற்கேதெரியுங்கற்பதனில்
தூயேனென்னிற்றொழுகின்றேனெரியேயவனைச்சுடலென்றுள் ()

வேறு

வெளுத்தமென்னகையவள்விளம்புமேல்வையின்
ஒளித்தவெங்கனலவனுள்ளமுட்கினன்
தளிர்த்தனமயிர்புறஞ்சிலிர்ப்பததண்மையால்
குளிர்த்தவக்குரிசில்வாலென்புகூரவே. (௩௨௮)

வேறு.

மற்றினிப்பலவென்வேலைவடவனல்புவியளாய
கற்றையங்கனலிமற்றைக்காயத்தீமுனிவாசாக்கும்
முற்றுறுமும்மைச்செந்தீமுட்புரமுருங்கச்சுட்ட
கொற்றவனெற்றிக்கண்ணின்வன்னியுங்குளிர்ந்தவன்றே! (௩௨௯)

அண்டமுங்கடந்தானங்கையனலியுங்குளிர்ந்ததங்கிக்
குண்டமுங்குளிர்ந்தமேகத்துருந்மெலாங்குளிர்ந்தகொற்றச்
சண்டவெங்கதிரவாகித்தழங்கிருள்விழுங்குந்தாவில்
மண்டலங்குளிர்ந்தமீளாநரகமுங்குளிர்ந்தமாதோ. (௩௩௦)

வெற்பினொலியன்றதன்னமேனியைவிழுங்கிவேந்தீ
நிற்பினுஞ்சுடாதுநின்றநீர்மையைநினைவினோக்கி
அற்பினாரறுதசிந்தையநுமனுஞ்சனகன்பாவை
கற்பினாலியன்றதென்பான்பெரியதோர்களிப்பனானான். (௱௯௧)

அற்றையவ்விரவிற்றான்றனறிவினான்முழுதுமுன்னப்
பெற்றிலெனெனினுமாண்டொன்றுள்ளதுபிழையுறாமே
மற்றுறுபொறிமுன்செல்லமறைந்துசெலலறிவுமானக்
கற்றிலாவரக்கர்தாமேகாட்டலிற்றெரியக்கண்டான் (௱௯௨)

முழுவதுந்தெரியநோக்கிமுற்றுமோர்முடிவிற்சென்றான்
வழுவுறுகாலமீதென்றெண்ணினன்வலிதிற்பற்றித்
தழிவினனிரண்டுநூறாயிரம்புயத்தடக்கைத்தாய்போ
டெழுவெனநாலவிண்மேலெழுந்தனன்விழுந்தவெல்லாம் (௱௯௩)

இற்றவாளரக்கர்நூறாயிரவருமிழந்ததோளார்
முற்றினாருலந்தகாளையன்மொய்ம்பினோடுடலமூழ்கச்
சுற்றியகயிற்றினோடுந்தோன்றுவானரவின்சுற்றம்
பற்றியகலுழனென்னப்பொலிந்தனன்விசும்பின்பாலான் (௱௯௪)

துன்னலர்புரத்தைமுற்றுஞ்சுடுதொழிற்றொல்லையோனும்
பன்னினபொருளுநாணப்பாதகரிருக்கைபற்ற
மன்னனைவாழ்த்திப்பின்னைவயங்கெரிமடுப்பெனென்னாப்
பொன்னகர்மீதேதன்போர்வாலினைப்போகவிட்டான் (௱௯௫)

தன்னிறைக்குறுகண்வெய்யோர்தாமியற்றலுங்கேட்டின்னே
அன்னவர்க்கிறுதியாகவணிநகரழிப்பலென்னாச்
செந்நிறச்சிகையவெம்போர்மழுப்பின்னர்ச்சேறலொக்கும்
அன்னிறத்தண்ணற்றூதனனல்கெழுகொற்றநீள்வால் (௱௯௬)

அப்புறம்வேலைகாறுமலங்குபேரிலங்கைதன்னை
எப்புறத்தளவுந்தீயவொருகணத்தெரித்தகோட்டால்
துப்புறழ்மேனியண்ணன்மேருவிற்குழையத்தோளால்
முப்புரத்தெய்தகோலேயொத்ததம்மூரிப்போர்வால் (௱௯௭)

உகக்கடையுலகம்யாவுமுணங்குறவொருதன்னாட்டம்
சிகைக்கொழுங்கனலைவீசுஞ்செயன்முனம்பயில்வான்போல
மிகைத்தெழுதீயராயோர்விரிநகர்வீயப்போர்வால்
தகைத்தலின்றன்மைசாலுந்தனிவீரன்சேணினுய்த்தான் (௱௯௮

## ளருச இலங்கையெரியூட்டுப்படலம்.

இல்விற்றங்குவயங்கெரியாவையும்
சொல்லிற்றீர்ந்தனபோலவனைத்தொல்னெருப்
புல்லுக்கொண்டனமாலையப்புணர்ப்பறக்
கல்வித்தம்மியல்பெய்துங்கருத்தர்போல் (௬)

ஆயதங்கொர்றூறனுருவாயடித்
தாயளந்துலகங்கடரக்கொள்வான்
தீயெழுந்தகரியவன்மேனியில
போமெழுந்துபரந்தது வெய்புகை. (௭)

நீலநின்றநிறத்தனகிழ்நிலை
மாலின்வெஞ்சினயானைகடமானுவ
மேல்விழுந்தெரிமுற்றும்விழுங்கலால்
தோலுரிந்தழன்றனதோலெலாம். (௮)

தீதிமங்கலந்தாலன்னவெப்புகை
சோதிமங்கலத்தியொப்சுற்றலால்
மேதிமங்குலின்வீழ்புனைவீழ்மட
வோதிமங்களின்மாதரொதுங்கினர். (௯)

பொடித்தெழுந்தபெருப்பொறிபோவன
இடிக்குலங்களின்வீழ்சவுமெனுணும்
வெடித்தவல்லைவெதும்படமீன்குலம்
துடித்துவெந்துபுலர்ந்துயிர்சோர்ந்தவால் (௰)

பருஞ்சிமடித்துள்ளுறப்பற்றலால்
அருந்நீடிபவாடசத்தானைகள்
உருகிவேலைபினூடுபுக்குற்றன
இருகுபொன்னெடுந்தண்டிற்றிரண்டவால் (௰௧)

உணையின்மூழ்ந்துலகுண்ணுமெரியதால்
வளைதிவந்தனபன்மணிமாளிகை
நிளையினீணெடுஞ்சோலையினிற்குமோ
தளையும்வெந்ததுபொன்னெனுந்தனமையால் (௰௨)

கல்வினும்வலிதாய்புகைக்கற்றையால்
எல்விபெற்றதிமையவர்நாடியல்
வல்லிகோவிநிவந்தனமாடணிச்
செல்வியோடுந்திரண்டனதோலரம்.] (௰௩)

# ௫௩ இலங்கையெரியூட்டுப்படலம்

பரிதிபற்றிநிமிர்ந்தெழுபைங்கனல்
கருகிமுற்றுமெரிந்தெழுகார்மழை
அருகுசுற்றுமிருந்தவையதாயதின்
உருகுபொற்றிரளொத்தனவொண்கதிர் (உஉ)

தளைகொளுந்தியதாவெரிதாமணி
முளைகொளுந்திமுகத்திடைமொய்த்தபேர்
உளைகொளுந்தவுலந்துலைவுற்றன
வளைகுளம்பின்மணிநிறவாசியே. (உ௩)

எழுந்துபொற்றலத்தேறலினீள்புகைக்
கொழுந்துசுற்றவுயிர்ப்பிலர்கோளுழுத்
றழுந்துபட்டவளொத்தயர்ந்தாரழல்
விழுந்துமுற்றினர்கூற்றைவிழுங்குவார் (உ௪)

கோசிகத்துகிலுற்றதொழுங்கனல்
தூசினுத்தரியத்தொடுசுற்றுறு
வாசமைக்குழல்பற்றமயங்கினார்
பாசிழைப்பரவைப்படரல்குலார். (உ௫)

வேறு.

நிலவிலங்கியதுகிலினைநெருப்புணநிருதர்
இலவினுஞ்சிலமுத்துளவெனுநகையனையார்
புலவியின்கலைகண்டவரமுதுகப்புணரும்
கலவியின்கலைகண்டிலர்மண்டினர்கடன்மேல். (உ௬)

பஞ்சரத்தொடுபசுநிறக்கிளிவெந்துபதைப்ப
அஞ்சனக்கணினருவிநீர்முலைமுன்றிலலைப்பக்
குஞ்சரத்தனகொழுநரைத்தழுவுறுங்கொதிப்பால்
மஞ்சுறப்புகுமினனெனப்புகையிடைமறைந்தார். (உ௭)

வரையினைப்புரைமாடங்களெரிபுகமகளிர்
புரையில்பொற்கலன்விசும்பிடைவில்விடப்போவார்
தரையினுட்புகைப்படலையிற்கரிந்தனர்கலங்கத்
திரையினுட்பொலிசித்திரப்பாவையின்செயலார். (உ௮)

அகருமன்னறுஞ்சாந்தமுமுதலியவநேகம்
புகரினன்மரத்துறுவெறியுலகெலாம்போர்ப்பப்
பகருமூழியிற்காலவெங்கடுங்கனல்பருகும்
[illegible]வெக்கனகந்தவனங்கள் (உ௯)

விண்ணப்பரந்தெழுகொழுஞ்சுடருலகெலாம்விழுங்க
நினைப்பரும்பெருந்திசையுறவிரிகின்றநிலையால்
சினைப்பரந்தெரிசேர்ந்திலதின்றவுஞ்சிலவும்
கனைப்பரந்தவுந்தெரிகிலகற்பகக்கானம். (௬௰)

ஊனும்வெம்புகைவிழுங்கலிற்சுற்றுறமுழுதீ
மானும்வண்ணமாமலைநெடுந்தலைதொறுமடங்கிப்
பூளைவீயன்னபோவனபுணரியிற்புனல்மீன்
மீளயாவையுந்தெரிந்திலமுகிற்கணமிசைய. (௬௧)

மிக்கவெம்புகைவிழுங்கலின்வெள்ளியங்கிரியும்
ஒக்கவெற்பினோடஞ்சனமுங்காக்கையினுருவ
பக்கவேலையின்பாலியதுபார்கடன்முழுவிற்
றிக்கயங்களுங்கயங்களும்வேற்றுமைதெரியா. (௬௨)

கரிந்துசிந்திடக்கடுங்கனறொடர்ந்துடல்கருவ
உரிந்தமெய்யினரோடினர்நீரிடையொளிப்பார்
எரிந்தகூந்தலுங்குஞ்சியுமிடைசலிற்றுழும்
எரிந்துவேகின்றவொத்தனவெறிதிரைப்பரவை. (௬௩)

மருங்கின்மேலொருமகவுகொண்டொருகணிமகவை
அருங்கையாற்பற்றிமற்றொருமகவுபின்னரற்ற
நெருங்கிஞரொடுநெறிகுழலசுறுக்கொளநீக்கிக்
கருங்கடற்றலைவீழ்ந்தனரரக்கியர்கதறி. (௬௪)

வில்லும்வேலும்வெங்குந்தமுமுதலியவிறகாய்
எல்லுடைச்சுடரொணப்புகமொங்கெலாமுருகித்
தொல்லைநன்னிலைதொடர்ந்துபேருணர்வனன்றொழிலாற்
கல்வியுண்டையிற்றிரண்டனபடைக்கலச்சாலை. (௬௫)

செய்தொடர்க்கழல்வல்லியும்பரசையுஞ்சிந்தி
நொய்தினிட்டவன்றறிபறித்துடலெரிநுழைய
மொய்த்தடச்செவிநிறுத்திவான்முதுக்கினிமுழக்கிக்
கையெடுத்தழைத்தோடினவோடைவெங்களிமா. (௬௬)

வெருளும்வெம்புகைப்படலையின்மேற்செலவெருவி
இருளும்வெங்கடல்விழுந்தனவெழுந்திலபறவை
மருளின்மீன்கணம்விழுங்கிடவுலந்தனமனத்தோர்
அருளில்வஞ்சரைத்தஞ்சமென்றடைந்தவரனைய. (௬௭)

# இலங்கையெரியூட்டுப்படலம்

நீளைவற்றிடப்பருகிமாநெடுநிலந்தடவித்
தாருவைச்சுட்டுமலைகளைத்தழற்செய்துகனிமா
மேமநகவைப்பற்றியெரிகின்றகாலவெங்கனல்போல்
ஊழைமுற்றுவித்திராவணன்மனைபுக்கதுயர்தீ. (௫௮)

வானமாதருமற்றுளமாதருமறுகிப்
போனபோனதிக்கறிகிலரனைவரும்போனார்
எனநின்றவரெங்குமுயிர்ந்தனரிலங்கைக்
கோனவானவர்பதிகொண்டநாளெனக்குலைந்தார் (௫௯)

நாவியுந்நறுங்கலவையுங்கற்பகநக்கப்
பூவுமாரமுமகிலுமெய்ப்பிணையனபுகையத்
தேவுந்தேன்மழைசெறிபெருங்குலமெனத்திசையிற்
பாவைமார்நறுங்குழல்களும்பரிமளங்கமழ்ந்த. (௬௰)

சூழும்வெஞ்சுடர்தொடர்ந்திடயாவருந்தொடரா
வாழிவெஞ்சினத்தாண்டொழிலிராவணன்மனையின்
ஊழிவெங்கனலுண்டிடவுலகமென்றுயர்ந்த
ஏழும்வெந்தனவெரிந்தனநெடுநிலையேழும். (௬௧)

பொன்றிருத்திபகாயகாலிராவணன்புனைதீர்
குன்றமொத்துயர்தடநெடுமாநிலைக்கோயில்
நின்றதற்றெரிபருகிடநெரிவுறவுருகித்
தென்றிசைக்கதோர்மேருவுண்டாமெனத்தெரிந்த (௬௨

அனைபகாலைபினரக்கனுமரிவையர்குழுவும்
புனைமணிப்பொலிபுட்பகவிமானத்திற்போனார்
நினையுமாத்திரையாவருநீங்கினர்நினையும்
வினையிலாமையில்வெந்ததவ்விலங்கல்மேலிலங்கை. (௬௩

ஆழித்தேரவனரக்கனையபுலெழநோக்கி
ஏழுக்கேழெனவகுக்கியவுலகங்களெரியும்
ஊழிக்காலம்வந்துற்றதோபிறிதுவேறுண்டோ
பாழித்தீச்சுடவந்ததென்னகொனப்பகர்ந்தான். (௬௪)

கரங்கள்கூப்பினர்தங்கிளைதிருவொடுங்காணார்
இரங்குகின்றவலரக்கரீதியம்பினரிறையோய்
தரங்கவேலையினெடியதன்வாலிட்டதழலால்
குரங்குசுட்டதீதென்றலுமிராவணன்கொதித்தான் (௬௫

சுற்றினதேரினர்தோலா
விற்றொழில்வீரம்விளைத்தார்
எற்றினன்மாருதியெற்ற
உற்றெழுவோருமுலந்தார் (௬௰)

விட்டுயர்விஞ்சையர்வெந்தீ
வட்டமுலைத்திருவைகும்
புட்டிரள்சோலைபுறத்தும்
சுட்டிலதென்பது சொன்னார் ()

வந்தவர்சொல்லமகிழ்ந்தான்
வெந்திறல்வீரன்வியந்தான்
உய்ந்தனெனென்னவுயர்ந்தான்
மைந்தொடிதாள்கள் பணிந்தான்.

பார்த்தனள்சானகியாரா
வேர்த்தெரிமேனிகுளிர்ந்தாள்
வார்த்தையென்வந்தனையென்றாய்
போர்த்தொழில்மாருதிபோனான்

தெள்ளியமாருதிசென்றான்
கள்ளவரக்கர்கள்கண்டால்
என்னவர்பற்றுவதொன்றோ
ஒள்ளொளியோனுமொளித்தான்()

இலங்கையெரியூட்டுப்படலம்.
முற்றிற்று.
ஆ படலம்-௰௪௫ திருவிருத்தம்
௯௨௱௫௰௧.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

# ௰௫ - வது - திருவடிதொழுதபடலம்

நீங்குவென்விரைவினென்னு நினைவினன்மருங்குநின்ற
தாங்கொருகுமிக்குன்றையருச்சனினைந்தவையன்
வீங்கினனுலகையெல்லாம்விழுங்கினனென்ன வீரன்
பூங்கழறொழுதுவாழ்த்திவிசும்பிடைக்கடிதுபோனான். (௧)

மைந்நாகமென்னநின்றகுன்றையுமரபினெய்திக்
கைந்நாகமனையோனுற்றதுணர்த்தினன்கணத்தின்காலைப்
பைந்நாகநிற்கும்வீரர்தன்னெடுவரவுபார்க்கும்
கொய்ந்நாகநறுந்தேன்சிந்துங்குன்றிடைக்குதியுங்கொண்டான் (௨)

போய்வருங்கருமமுற்றிற்றென்பதோர்பொம்மல்பொங்க
வாய்வெரீஇநின்றவென்றிவானரவீரர்மன்னோ
பாய்வருநீளத்தாங்கணிருந்தனபறவைப்பார்ப்புத்
தாய்வரக்கண்டதன்னவுவகையிற்றளிர்த்தாரம்மா. (௩)

அழுதனர்சிலவர்முன்னின்றார்த்தனர்சிலவரண்மித்
தொழுதனர்சிலவராடித்துள்ளினர்சிலவர்வள்ளி
முழுதுறவிழுங்குவார்போன்மொய்த்தனர்சிலவர்சுற்றும்
தழுவினர்சிலவர்கொண்டுசுமந்தனர்சிலவர்தாங்கி. (௪)

தேனொடுகிழங்குகாயுநறியனவரிதிற்றேடி
மேன்முறைவைத்தேமண்ணனுகர்ந்தனைமெலிவுதீர்தி
மானவாண்முகமேநங்கட்குரைத்ததுமாற்றமென்று
தானுயர்சாகமெல்லாமுறைமுறைசிலவர்தந்தார். (௫)

தாள்களின்மார்பிற்றோளிற்றலைகளிற்றடக்கைதம்மின்
வாள்களின்வேலிற்கோலின்மழையினின்வருத்தபுண்கள்
நாள்கண்மேலுலகிற்சென்றவெண்ணனநம்பிகண்ண,
ஊழ்கொளநோக்கிநோக்கியுயிருகவுளைந்துயிர்த்தார். (௬)

வாலிகாதலனைமுந்தைவணங்கினனெண்கின்வேந்தைக்
காலுறப்பணிந்துபின்னைக்கடன்முறைகடவோர்க்கெல்லாம்
மேலுறவியற்றியாங்கணிருந்திவணிருந்தோர்க்கெல்லாம்
ஞாலநாயகன்றன்றேவிசொல்லினனன்மையென்றான். (௭)

என்றலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சித்தாழா
நின்றனருவகைபொங்கவிம்மலானிமிர்ந்தநெஞ்சர்
சென்றதுமுதலாவந்ததிறுதியாச்செப்பற்பாலை
வன்றிறலுரவோயென்னச்சொல்லினன்மருத்தின்மைந்தன். (௮)

ஆண்டகைதேவியுள்ளத்தருந்தவமமையச்சொல்லிப்
பூண்டபேரடையாளங்கைக்கொண்டதும்பகன்றுபோரில்
நீண்டவாளரக்கரோடுநிகழ்ந்ததுநெருப்புச்சிந்தி
மீண்டதும்விளம்பான்றான்றன்வென்றியையுரைப்பவெள்கி. (௯)

பொருதமையுண்மேன்சொல்லவென்றனைமேபோந்ததன்மை
உரைசெயவூர்தீயிட்டதோங்கிரும்புகையேயோதக்
கருதலிர்பெருமைதேவிமீண்டிலாச்செயலேகாட்டத்
தெரிதரவுணர்ந்தேம்பின்னமொன்னினிச்செய்துமென்றார். (௰)

யாவையுமினிவேறெண்ணல்வேண்டுவதிறையுமில்லைச்
சேவகன்றேவிதன்னைக்கண்டமைவினாவிற்செப்பி
ஆவதவ்வண்ணலுள்ளத்தருந்துயராற்றலேயாம்
போவதுபுலமையென்னாப்பொருக்கெனவெழுந்துபோனார். (௰௧)

போயினர்களிப்பினோடும் புங்கவன்சிலையினின்றும்
ஏபினபகழியன்னவெழுந்துவிண்படர்ந்துதாவிக்
காய்கதிர்க்கடவுள்வானத்துச்சிசென்றிறுக்குங்காலத்
தாயனவீரரும்போய்மதுவனமதிலிறுத்தார். (௰௨)

ஏதுநாளிறந்தசாலவெண்பதோர்வருத்தநெஞ்சத்
தாதலாலுணவுதீர்ந்துவருந்தினமளியமெய்ம்மைச்
சாதநீர்த்தளித்தவீர்தந்தருளுணவுமென்னப்
போதுநாம்வாலிசெய்பாலென்றுடனெழுந்துபோனார். (௰௩)

அங்கதன்றன்னையண்மியனைவருமிருகைகூப்பிக்
கொங்குதங்கலங்கன்மார்பநின்னுடைக்குரக்குச்சேனை
வெங்கதமொழிந்துசாலவருந்தினவேடையோடி
இங்கிதற்களித்தல்வேண்டுமிருளுமிழ்பிரசமென்றார். (௰௪)

நன்றெனவவனுநேர்ந்தானரலையுநடுங்கவார்த்துச்
சென்றுறுபிரசந்தூங்குஞ்செழுவனமதனினூடே
ஒன்றின்முன்னொன்றுபாயுமொடிக்குமெம்பிரசமெல்லாம்
தின்றுநின்றுவகைகூருந்தேனுகரளியின்மொய்த்தே. (௰௫)

ஒருவர்வாய்க்கொள்ளுந்தேனையொருவருண்டெளிதிற்போவார்
ஒருவர்கைக்கொள்ளுந்தேனையொருவர்கொண்டோடிப்போவார்
ஒருவரோடொருவரொன்றத்தழுவுவர்விழுவரோடி
ஒருவர்மேலொருவரேறியோகையென்றுவகைகூர்வார். (௰௬)

இன்னணநிகழுங்காலையெரிவிழித்தெழுந்துசீறி
அன்னெடுஞ்சாலைகாக்கும்வானரரவரைநோக்கி
மன்னெடுங்கதிரோன்மைந்தனுணையமறுத்துநீயிர்
என்னினைந்தென்செய்தீர்மன்னுமுயிர்க்கிறுதியென்ன (௰௭)

முனியுமாலெம்மையெங்கோனென்றவர்மொழிந்துபோந்து
கனியுமாமதுவனத்தைக்கட்டழித்திட்டதின்று
நனிதருகவியின்றானைநண்ணலார்செய்கைநாண
இனியெம்மாற்செயலின்றென்றுத்ததிமுகற்கியப்பினரோ. (௰௮)

கேட்டவன்யாவரோயெம்மதுவனங்கெடுசூழ்ந்தார்
காட்டியென்றெழுந்தானன்னார்வாலிசேய்முதலகற்றோர்
கூட்டம்வந்திறுத்ததாகவங்கதனேவலன்றால்
மாட்டினகவியின்றானைமதுவளருலவையீட்டம். (௰௯)

உரங்கிளர்மதுகையான்றனாணையாலுமறிகொண்டே
குரங்கினந்தம்மையெவ்வாம்விலக்கினுங்கொடுமைகூறிக்
கரங்களாலெற்றநொந்தேங்காவலோயென்னலோடும்
தரங்கிளர்தாரைபட்டதமிழ்ந்தின்றுயன்போலும். (௨௰)

எனவுரைத்தனலிற்பொங்கியெழுந்திரைத்திரண்டுகோடி
கனைகழற்கவியின்சேனைகல்லெனக்கலந்துபுல்லப்
புனைமதுச்சோலைபுக்கான்மதுமுகர்புனிதச்சேனை
அனைத்தனைவாழ்த்தியோடியங்கதனடியின்வீழ்ந்த (௨௧)

இந்திரன்வாலிக்கீந்தவின்சுவைமதுவின்கானம்
அந்தரத்தவர்க்குநோக்கற்கரியவென்னானைதன்னைச்
சிந்தினைகதிரோன்மைந்தன்றிறவினையறிதியன்றே
மந்தரமனையதோளாயிற்றதுன்வாழ்க்கையின்றே. (௨௨)

மதுவனந்தன்னையின்னேமாட்டுவித்தனைநீயென்னாக்
கதுமெனவாலிசெய்மேலெறிந்தனன்கருங்கற்பாறை
அதுதனைப்புறங்கையாலேயகற்றியங்கதனுஞ்சீறித்
ததிமுகன்றன்னைப்பற்றிக்குத்தினன்றடக்கைதன்னால். (௨௩)

வாய்வழிகுருதிசோரமணிக்கையான்மலங்கமோதிப்
பேய்மொழிகதிரோன்மைந்தற்கென்றவன்றன்னைப்போக்கித்
தீயெழும்வெகுளிபொங்கமற்றவன்சேனைதன்னைக்
காய்கனல்பொழிபுங்கையாற்குத்துதிர்கட்டியென்றான். (௨௪)

பிடித்தனர்கொடிகடம்மாற்பிணித்தனர்பின்னுமுன்னும்
இடித்தனரசனிபஞ்சவெறுழ்வலிக்கரங்களோச்சித்
துடித்தனருடலஞ்சோர்ந்தார்சொல்லும்போய்நீருமென்னாப்
படித்தனன்வாலிமைந்தன்பயத்துடனவரும்போனார். (௨௫)

அலைபுனல்குடையுமாபோன்மதுக்குடைந்தாடித்தத்தம்
தலைவர்கட்கினியதேனுங்கனிகளும்பிறவுந்தந்தே
உலைவுறவருத்தந்தீர்ந்திட்டுபவனத்திருந்தாரப்பால்
சிலைவளைத்துலவுந்தேரோன்பெற்றும்வெயிறணிவுபார்த்தே. (௨௬)

முத்தலையெஃகிறைக்குமுடிப்பருங்கருமமுற்றி
வித்தகன்றூதுமீண்டதிறுதியாய்விளைந்ததன்மை
அத்தலையறிந்தவெல்லாமறைந்தனமாழியான்மாட்
டித்தலைநிகழ்ந்தவெல்லாமியம்புவானெடுத்துக்கொண்டாம். (௨௭)

வேறு.

சேற்றிளமரைமலர்த்திருவைத்தேர்செனக்
காற்றின்மாமகன்முதற்கவியின்சேனையை
நாற்றிசைமருங்கினுமேவிநாயகற்
றேற்றினனிருந்தனன்கதிரின்செம்மலே! (௨௮)

கார்வரையிருந்தனன்கதிரின்காதலன்
சீரியசொற்களிற்றெருட்டச்செங்கணான்
ஆருயிராயிரமுடையனாமெனச்
சோர்தொறுஞ்சோர்தொறுமுயிர்த்துத்தோன்றினான்

தண்டலினெடுந்திசைமூன்றுந்தாயினர்
கண்டிலர்மடந்தையையென்னுங்கட்டுரை
உண்டுயிரகத்தெனவொறுக்கவுமுளான்
திண்டிறலனுமனைநினையுஞ்சிந்தையான். (௫௰)

ஆரியனருந்துயர்க்கடல்வீழ்பவன்
சீரியகன்றுநஞ்செய்கைதீர்வரும்
பூரியவெம்பழிபொடித்ததாமெனச்
சூரியசிறுவனைநோக்கிச்சொல்லினான். (௫௧)

குறித்தநாளிகந்தனகுன்றத்தென்றிசை
வெறிக்கருங்குழலியைநாடன்மேயினார்
மறித்திவண்வந்திலர்மாண்டுளார்கொலோ
பிறிந்தவர்க்குற்றுளதெவ்வினைபெற்றியோ. (௫௨)

மாண்டனளவளிவண்மாண்டவார்த்தையை
மீண்டவர்க்குரைத்தலின்விளிதனன்றெனாப்
பூண்டதோர்துயர்கொடுபொன்றினார்கொலோ
தேண்டினரின்னமுந்திரிகின்றார்கொலோ. (௫௩)

கண்டனரரக்கரைக்கறுவுகைமிக
மண்டமர்தொடங்கினார்வஞ்சர்மாயையால்
விண்டலமதனின்மேயினர்கொல்வேறிலாத்
தண்டலினெடுஞ்சிறைதளைபட்டார்கொலோ. ( ).

கூறினநாளவரிருக்கைகூடலம்
ஏறலஞ்சாதுமெனவின்பதுன்பங்கள்
ஆறினரருந்தவமயர்கின்றார்கொலோ
வேறவர்க்குற்றதென்விளம்புவாயென்றான் (௫௫)

என்றுரைத்திடருழந்திருக்கும்வேலையில்
வன்றிறற்றதிமுகன்வானரேசன்முன்
நன்றலைப்பொழிலருகுறுதிகன்றெனும்
ஒன்றெனப்பணித்தனன்விருந்தைகூட்டியே. (௫௬)

எழுந்துநின்றுரையேவின்றநாளேயோ
டழிந்ததுமதுவனமடையவென்றலும்
வழிந்திடுகுருதியின்வதனநோக்கியே
மொழிந்திடங்கியாரதுமுடித்தரோரோன. (௩௭)

நீலனுங்குமுதனுநெடியகுன்றமே
போலுயர்சாம்பனும்புனரிபோர்த்தென
மேலெழுசேனையும்விரைவின்வந்துறுஞ்
சால்புடைமதுவனந்தனையழிப்பவே. (௩௮)

தலைந்தவச்சேனையைத்தள்ளிநின்னையும்
மிகழ்ந்துரைத்திடைத்தனன்வாலிசேயெமக்
குகந்தனபுகன்றவவ்வுரைபொருட்டயே
புகைத்தொருபாறையின்புணர்ப்புநீக்கியே. (௩௯)

இளமைத்தன்முன்வாலிசேயெழில்கொள்யாக்கையைச்
சமைத்தியென்றெறிதரப்பறங்கையாற்றகைத்
தமைத்தருகனலெனவழன்றெற்பற்றியே
குமைத்துயிர்பதைப்பநீகூறுபோயென்றான் (௪௰)

எம்பலொடெழுந்துநின்றிரவிகான்முளை
பாம்பணையமலனைவணங்கிப்பைந்தொடி
மேம்படுகற்பினளென்றுமெய்ம்மையைத்
தாம்புகன்றிட்டதிச்சலமென்றோதினான். (௪௧)

பண்டருகிளவியாடன்னைப்பாங்குறக்
கண்டனரன்னதோர்களிப்பினலவர்
வன்றிறைமதுவனமழித்துமாந்திய
தண்டநாயகவினியவலந்தீர்கெனு. (௪௨)

வந்தனர்தென்றிசைவாலிறையொனைப்
புந்திநொந்தென்னைகொல்புகலற்பாலதொன்
றெந்தையுமிருந்தனனிரவிகான்முளை
நொந்தவத்திமுகன்றன்னைநோக்கியே. (௪௩)

யாரவணிறுத்தவரியம்புவாயென
மாருதிவாலிசேய்மயிந்தன்சாம்பவன்
சோர்வறுபதின்மேலோர்கடன்னினார்
ஆர்கலிநாணவந்தார்க்குஞ்சேனையார். (௪௪)

என்றவனுரைத்தபோதிரவிகாதலன்
வன்றிறற்றநிழுகன்வதனநோக்கியே
ஒன்றுனக்குணர்த்துவதுளதுவாலிசேய்
புன்றொழிற்செய்கைசேர்புணரப்பனல்லனால். ()

கொற்றவன்பணிதலைக்கொண்டுதெண்டிரை
சுற்றியதிசையெலாந்துருவித்தோகையைப்
பற்றியபகைஞரைக்கடிந்துபாங்கர்வந்
துற்றனரவரையாமுரைப்பதென்னையே (சுசு)

அன்றியும்வாலிசேயரசதாதலின்
பின்றுதறீதரோபிணங்குஞ்சிந்தையாய்
ஒன்றுநீயுணரலையுறுதிவேண்டுமேல்
சென்றவன்றனைச்சரண்சேர்தியீண்டென (சஎ)

வணங்கியசென்னியன்மறைத்தவாயினன்
உணங்கியசிந்தையனொடுங்குமேனியன்
கணங்களொடேகியக்கானனண்ணினன்
மணங்கிளர்தாரினான்மறித்தும்வந்தமோ (சஅ)

கண்டனன்வாலிசேய்கறுவுகைமிக
விண்டவனம்மெதிர்மீண்மிளானெனின்
உண்டிடுதுமுயிரென்னவுன்னினான்
தொண்டெனத்ததிழுகன்றொழுதுதோன்றினான் ()

போழ்ந்தனயான்செய்தகுறைபொறுக்கென
வீழ்ந்தனனடிமிசைவீழவாலிசேய்
தாழ்ந்துகைபற்றிமெய்தழீஇக்கொண்டும்மையான்
சூழ்ந்ததும்பொறுக்கெனுமுதன்மைசொல்லினான்

யாழுதற்குறித்தநாளிறத்தலெண்ணியே
ஏழுறத்துயர்துடைத்தளித்தவேற்றம்போல்
தாமரைக்கண்ணவன்றுயரந்தள்ளநீர்
போமெனத்தொழுதுமுன்னருமன்போயினான் ()

வன்றிறற்சூரிசிலுமுணிவுமாறினான்
வென்றிகொள்கதிருந்தன்வெம்மையாறினான்
என்றுகொண்டியாவருமெழுந்துபோதமேல்
நன்றெனவேகினார்நலைக்கணீங்கினார் (ரு௨)

இப்புறத்திராமனுமிரவிசேயினை
ஒப்புறநோக்கிவந்துற்றதானையர்
தப்பறக்கண்டனமென்பரோதகா
தப்புறத்தென்பரோவறைதியாலென்றான். (௫௩)

என்புழியனுமனுமிரவியென்பவன்
தென்புறத்துளனெனத்தெரிவதாயினான்
பொன்பொழிதடக்கையப்பொருவிலவீரனும்
அன்புறுசிந்தையனமையநோக்கினான். (௫௪)

எய்தினனநுமனுமெய்தியேத்தறன்
மொய்கழறொழுகிலன்மூளரிநீங்கிய
தையலைநோக்கியதலையன்கையினன்
வையகந்தழீஇநெடிதிறைஞ்சிவாழ்த்தினான். (௫௫)

திண்டிறலவன்செயறெரியநோக்கினான்
வண்டிறலோதியும்வலிபண்மற்றிவன்
கண்டதுமுண்டவள்கற்புநன்றெனக்
கொண்டனன்குறிப்பினுணருங்கொள்கையான்

ஆங்கவன்செய்கையையளவையாமெனு
ஒங்கியவுணர்விறைவிளைந்ததுன்னினான்
வீங்கினன்றோள்புனல்கண்கள்விம்மினன்
நீங்கியதருந்துயர்காதனீண்டதே. (௫௭)

கண்டனென்கற்பினுக்கணியைக்கண்களால்
தெண்டிரையலைகடலிலங்கைத்தென்னகர்
அண்டர்நாயகவினித்துறத்தியையமும்
பண்டுளதுயருமென்றநுமன்பன்னுவான். (௫௮)

வேறு.

உன்பெருந்தேவியென்னுமுரிமைக்குமுன்னைப்பெற்ற
மன்பெருமருகியென்னும்வாய்மைக்குமிதிலைமன்னன்
தன்பெருந்தனயையென்னுந்தகைமைக்குந்தலைமைசான்றாள்
என்பெருந்தெய்வமைய்யாவின்னமுங்கேட்டியென்பான். (௫௯)

பொன்னலதில்லைப்பொன்னையொப்பெனப்பொறையினின்றாள்
தன்னலதில்லைத்தன்னையொப்பெனத்தனக்குவந்த
நின்னலதில்லைநின்னையொப்பெனநினைக்குநேர்ந்தாள்
என்னலதில்லையென்னையொப்பெனவெனக்குமீந்தாள். (௬௰)

## [illegible]௮ திருவடிதொழுதபடலம்

உன்குலமுன்னதாக்கியுயர்புகழ்க்கொருத்தியாய
தன்குலந்தன்னதாக்கித்தன்னையித்தனிமைசெய்தான்
வன்குலங்கூற்றுக்கீந்தவ்வானவர்குலத்தைவாழ்வித்
தென்குலமெனக்குத்தந்தாளென்னினிச்செய்வதெம்மோய்." (௯௧)

விற்பெருந்தடந்தோள்வீரவீங்குநீரிலங்கைவெற்பின்
நற்பெருந்தவத்தளாயநங்கையைக்கண்டேனல்லேன்
இற்பிறப்பென்பதொன்றுமிரும்பொறையென்பதொன்றும்
கற்பெனும்பெயரதொன்றுங்களிநடம்புரியக்கண்டேன் (௯௨)

கண்ணினுமுளைநீதையல்கருத்தினுமுளைநீவாயின்
எண்ணினுமுளைநீகொங்கையிணைக்குவைதன்னிறைவா
தண்ணல்வெங்காமனெய்தவலரம்புதொளைத்தவாறப்
புண்ணினுமுளைநீநன்னைப்பிரிந்தமைபொருந்திற்றோ. (௯௩

வேலைபுளிலங்கையென்னும்விரிநகரொருசார்விண்டோய்
சாலையுமாலைதானுமில்லமேதார்களைக்கற்பச்
சோலையங்கதனினும்பிபுல்விறற்றெருத்ததுய
சாலையினிருந்தாளையதவஞ்செய்ததவமாந்தையல். (௯௪)

மண்ணொடுங்கொண்டுபோனான்வானுயர்கற்பினுடன்
புண்ணியமேனிதீண்டவஞ்சுவானுலகம்பூத்த
கண்ணகன்கமலத்தண்ணல்கருத்திலாட்டொடுதல்கண்ணின்
எண்ணருங்கூறுப்மாய்த்தியென்றமேதார்மொழியுண்டென்டான் ()

தீண்டிலனென்னும்வாய்மைதிசைமுகன்செய்தமுட்டை
கீண்டிலதைநந்தனுச்சிகிழிந்திலதெழுந்துவேலை
மீண்டிலசுடர்கள்யாவும்விழுந்திலமேவதஞ்செய்கை
மாண்டிலவென்னுந்தன்மைவாய்மையானுணர்தியன்றே (௯௬)

சோகத்தாளாயநங்கைகற்பினாற்றொழுதற்கொத்த
மாகத்தார்தேவிமாரும்வான்சிறப்புற்றார்மற்றைப்
பாகத்தாளிப்போதீசன்மகுடத்தாள்பதுமத்தாளும்
ஆகத்தாளல்லண்மாயனுயிரமௌலிமேலாள் (௯௭)

இலங்கையைமுழுதுநாடியிராவணனிருக்கையெய்திப்
பொலங்குழையவரையெல்லாம்பொதுவுறநோக்கிப்போந்தேன்
அலங்குதழ்ச்சோலைபுக்கேனவ்வழியணங்கனாளைக்
கலங்குதெண்டிரையிற்றூயகண்ணினீர்க்கடலிற்கண்டேன் (௯௮)

அரக்கியரளவற்ருருமலகையின்குழுவுமஞ்சச்
செருக்கினல்கண்டுசெய்யமெய்க்கனநீக்கச்சிர்த்த
இரக்கமென்ெருன்றுதானேயேந்திழைவடிவமெய்தித்
தருக்கியசிறையுற்றன்னதகையளத்தமியளம்மா. (சுகூ)

மாண்பிறந்தமைந்தகற்பின்வாணுதனின்பால்வைத்த
சேண்பிறந்தமைந்தகாதல்கண்களிற்றெவிட்டித்தீராக்
காண்பிறந்தமையானீயேகண்ணகன்ஞாலந்தன்னுள்
ஆண்பிறந்தமைந்தசெல்வமுண்டனையாதியன்றே. (எ0)

அயிர்ப்பிலர்காண்பாரமுன்னுமறிந்திலனெனினுமைய
வெயிற்புனையிலங்கைமூதூரிந்திரன்யாக்கைக்கேற்ற
மயிற்புனையியலினுனமைந்தருநாளுமாங்கே
உயிர்ப்பொடுமுயிரினேடுமூசனின்றுவாரும். (எக)

தையலைவணங்கற்கொத்தவிடைபெறுந்தன்மைநோக்கி
ஐயயானிருந்தகாலையலங்கல்வேலிலங்கைவேந்தன்
எய்தினனிரந்துகூறியிறைஞ்சினனிருந்துநங்கை
வெய்துரைசொல்லச்சீறிக்கோறன்மேற்கொண்டுவிட்டான். (எஉ)

ஆயிடையணங்கின்கற்புமையநின்னருளுஞ்செய்ய
தூயநல்லறனுமென்றிங்கினையனதொடர்ந்துகாப்பப்
போயினனரக்கிமாரைச்சொல்லுமின்பொதுவினென்றுங்
கேயினனவரொல்லாமெலமந்திரத்துறங்கியிற்ருர். (எந)

அன்னதோர்பொழுதினங்கையாருயிர்துறப்பதாக
உன்னினள்கொடியொன்றேந்திக்கொம்பொடுமுறைப்பச்சுற்றித்
தன்மணிக்கழுத்திற்சார்த்துமளவையிற்றடுத்துநாயேன்
பொன்னடிவணங்கிநின்றுநின்பெயர்புகன்றபோதில். (எச)

வஞ்சனையரக்கர்செய்கையிதுவெனமனக்கொண்டேயும்
அஞ்சனவண்ணத்தான்றன்பெயருரைத்தளியையென்பால்
துஞ்சுறுபொழுதிற்றந்தாய்துறக்கலென்றுவந்துசொன்னுள்
மஞ்செனவனமென்கொங்கைவழிகின்றமழைக்கணீராள். (எரு)

அறிவினிற்றேறிச்சொன்னபேரடையாளம்யாவும்
செறிவுறநோக்கிநாயேன்சிந்தையிற்றிருக்கமின்மை
முறிவுறவெண்ணிவண்ணமோதிரங்காட்டக்கண்டரள்
இறுதியினுயிர்தந்தீயுமருந்தெதிர்த்ததனையதெந்தாய். (எசு)

ஒருகணத்திரண்டுகண்டேனொளிமணியாழியான்ற
திருமுலைத்தடத்துவைத்தாள்வைத்தலுஞ்செல்வநின்பால்
விரகமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினால்வெந்
துருகியதுடனேயாறிவலித்ததுகுளிர்ப்புறூற (எஎ)

வாங்கியவாழிதன்னைவஞ்சரூர்வந்ததாமென்
றோங்குயர்மழைக்கணீராலாயிரங்கலசமாட்டி
ஏங்கினளிருந்ததல்லாலியம்பலளெய்த்தமேனி
வீங்கினள்வியந்ததல்லாலிமைத்திலளுயிர்ப்புவிண்டாள் (எஅ)

அன்னவர்க்கடியனேனிற்பிரிந்தபினடுத்தவெல்லாம்
சொன்முறையறியச்சொல்லித்தோகைநீயிருந்தசூழல்
இன்னதென்றறிகிலாமேபித்தனைதாழ்த்ததென்றே
மன்னநின்வருத்தப்பாடுமுணர்த்தினெனுயிர்ப்புவந்தாள் (எகூ)

இங்குளதன்மையெல்லாமியைபுளியியையக்கேட்டாள்
அங்குளதன்மையெல்லாமடியனுக்கறியச்சொன்னாள்
திங்களொன்றிருப்பெனின்னேதிருவுளந்தீர்ந்தபின்னை
மங்குவெனுயிரோடென்றுன்குரைகழற்றலைக்கண்வைத்தாள். (அ௰)

வைத்தபின்றுகிலின்வைத்தமாமணிக்கரசைவாங்கிக்
கைத்தலத்தினிதினீந்தாடாமரைக்கண்களார
வித்தககாண்டியென்றுகொடுத்தனன்வேதநன்னூல்
உய்த்துளகாலமெல்லாம்புகழொடுமோங்கநிற்பான். (அக)

ணைப்பையப்புயந்தகாமம்பரிணமித்துயர்ந்துபொங்கி
மெய்புறவெதும்பியுள்ளமெலிவுறுநிலையைவிட்டான்
ஐயனுக்கங்குமுன்னரங்கையாற்பற்றுநங்கை
கையெனலாயிற்றன்றேகைபுக்கமணியின்காட்சி. (அஉ)

பொடித்தனவுரோமம்போந்துபொழிந்தனகண்ணீர்பொங்கித்
துடித்தனமார்புந்தோளுந்தோன்றினவியர்வின்றுள்ளி
மடித்ததுமணிவாயாவிவருவதுபோவதாகித்
தடித்ததுமேனியென்னேயாருளார்தன்மைதேர்வார். (அங)

ஆயிடைக்கவிகளோடுமங்கதன்முதலினோர்
மேயினர்வணங்கிப்புக்கார்வீரனைக்கவியின்வேந்தைப்
போயினகருமமுற்றிப்புகுந்தனோர்பொம்மறன்றால்
சேயிருமதியுமென்னத்திகழ்தருமுகத்தரானார். (அச)

ஆண்டையினருக்கன்மைந்தனையகேளிரிவைநம்பால்
காண்டலுக்கெளியளாளென்றலுங்காலந்தாழ
ஈண்டினுமிருத்திபோலாமென்றனனென்றலோடும்
தூண்டிரண்டனையதோளான் பொருக்கெனவெழுந்துசொன்னான்

எழுகவெம்படைகளென்றானெனுமளவினெங்கும்
முழுமுறைசொற்றகொற்றவள்ளுவர்முரசுமுந்திப்
பொழிதிரையன்னவேலைபுடைபரந்தென்னப்பொங்கி
வழுவில்வெள்ளத்தானைதென்றிசைவளர்ந்ததன்றே (அசு)

வையகமதனின்மாக்கண்மயங்குவர்வயவெஞ்சேனை
எய்திடினென்பதுன்னியிராகவனினிதினேவப்
பெய்கனிகிழங்குதேனென்றினையனபெறுதற்கொத்த
செய்யமால்வரையேயாறாச்சென்றனதகைப்பில்சேனை (அஎ)

வீரரும்விரைவிற்போனார்விலங்கன்மேலிலங்கைவெய்யோர்
சோர்விலாக்காவற்பாடும்பெருமையுமரணுங்கொற்றக்
கார்நிறத்தரக்கரொன்போர்முகவியகணிப்பிலாத
வார்கழலனுமன்சொல்லவழிநெடிதெளிதிற்போனார் (அஅ)

அந்நெறிநெடிதுசெல்லவரிக்குலத்தரசனோடு
நன்னெறிக்குமரர்போகநயந்துடன்புணர்ந்தசேனை
இன்னெடும்பவழக்குன்றிற்பகலெல்லாமிறுத்தபின்னர்
பன்னிருபகலிற்சென்றுதென்றிசைப்பரவைகண்டார். (அகூ)

திருவடிதொழுதபடலம் - முற்றிற்று.

௧௫ படலம் - ௰௫௯ - திருவிருத்தம் - ௲௩௱௪௰௬.

## சுந்தரகாண்டம் - முற்றிற்று.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்





# படலாகராதி



# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௭ | ௪௭ | ௬ | சிகரப்படா | சிகரப்படர் |
| ௨௰ | ௫௯ | ௨ | உதயமேய்மடி | உதயமேமடி |
| ” | ” | ௬ | மூலைக்கதிர் | மூலைகதிர் |
| ௨௯ | ௮௧ | ௪ | வருகவென்றான் | வருகென்றான் |
| ௬௨ | ௨௱௬௩ | ௨ | செய்யந் | செய்புந் |
| ௭௫ | ௯௮ | ௪ | திலவிணு | திலவிணு |
| ௭௭ | ௱௯ | ௬ | மியன்றான் | மென்றான் |
| ௯௫ | ௪௫ | ௧ | சுடர்சூளை | சுடர்ச்சூளை |
| ௱௰௨ | ௫௧ | ௨ | சுமுழி | சூழிழி |
| ௱௨௭ | ௪௮ | ௪ | மாடணுகி | மாட்டணுகி |
| ௱௬௰ | ௬௰ | ௨ | விற்றொழில் | விற்றொழில் |

54510